# நாடுகண்டவர் வரலாறு

[முதற் புத்தகம்]



கழகக் கல்வியறிஞர் குழுவினர்

எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

செயற்கரிய செய்வார் பெரியர் என்ற மெய்ம் மொழிக்கு எடுத்துக்காட்டாக, மக்கள் இவ்வுலகின் முழு நிலப் பரப்பையும் அறியாதிருந்த காலத்து, அறிவும் ஆண் மையும் உடையோர் சிலர் தம் தளரா முயற்சியால் பல நாடுகளையுங் கண்டறிந்து, மற்றை உலக மக்களெல்லோரும் அந் நாடுகளோடும் தொடர்பு கொண்டு பயனடையுமாறு உதவினர்.

இத்தகையோர் தாம் நாடுகாணப் புகுந்தவிடத் துத் தமக்கு நேர்ந்த அடுக்கடுக்கான இன்னல்களையும் பொருட்படுத்தாது வெற்றிகண்ட வரலாற்றை "நாடு கண்டவர் வரலாறு" என்ற இந்நூல் கூறுவதாகும். இங் ஙனம் மக்கள் இனத்துக்கே இவ்வுலகின் முழு உருவத் தையும் கண்டறிவுறுத்தித் தலைமை எய்தியோர்தம் முயற் சியின் வரலாறு யாவராலும் விரும்பி உணரத் தக்கது.

மாணவர்க்குப் படித்தற்கு விருப்பத்தையுங் கொடுத்து, முயற்சி, இடுக்கணழியாமை, தலைமைப்பாடெய்தல் என்ற சிறந்த குணங்களையுங் கொடுக்குமாதலின், உயர் வகுப்பு கட்கு ஏற்ற துணைப்பாடப் புத்தகமாகவும் அமைக்கத் தகுதியுடைய இந்நூலைத் தமிழ்மக்கள் விரும்பி ஏற்று எம்பணிக்குத் துணை செய்வாராக

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

கழக வெளியீடு: ௪0௨

# நாடகண்டவர் வரலாறு

[முதற் புத்தகம்]

கழகக் கல்வியறிஞர் குழுவினர்
எழுதியது

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

**First Edition:** Nov., 1945
**Reprints:** Aug., 1948; April, 1957.

# NADU KANDAVAR VARALARU - I



*Published by,*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD., 1/140, BROADWAY, MADRAS - 1.

*Head Office:*

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1.—C. 1200.

# பதிப்புரை

செயற்கரிய செய்வார் பெரியர் என்ற மெய்ம் மொழிக்கு எடுத்துக்காட்டாக, மக்கள் இவ்வுலகின் முழு நிலப் பரப்பையும் அறியாதிருந்த காலத்து, அறிவும் ஆண் மையும் உடையோர் சிலர் தம் தளரா முயற்சியால் பல நாடுகளையுங் கண்டறிந்து, மற்றை உலக மக்களெல்லோரும் அந் நாடுகளோடும் தொடர்பு கொண்டு பயனடையுமாறு உதவினர்.

இத்தகையோர் தாம் நாடுகாணப் புகுந்தவிடத் துத் தமக்கு நேர்ந்த அடுக்கடுக்கான இன்னல்களையும் பொருட்படுத்தாது வெற்றிகண்ட வரலாற்றை "நாடு கண்டவர் வரலாறு" என்ற இந்நூல் கூறுவதாகும். இங் ஙனம் மக்கள் இனத்துக்கே இவ்வுலகின் முழு உருவத் தையும் கண்டறிவுறுத்தித் தலைமை எய்தியோர்தம் முயற் சியின் வரலாறு யாவராலும் விரும்பி உணரத் தக்கது.

மாணவர்க்குப் படித்தற்கு விருப்பத்தையுங் கொடுத்து, முயற்சி, இடுக்கணழியாமை, தலைமைப்பாடெய்தல் என்ற சிறந்த குணங்களையுங் கொடுக்குமாதலின், உயர் வகுப்பு கட்கு ஏற்ற துணைப்பாடப் புத்தகமாகவும் அமைக்கத் தகுதியுடைய இந்நூலைத் தமிழ்மக்கள் விரும்பி ஏற்று எம்பணிக்குத் துணை செய்வாராக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

குங்குமப்பூ, இரத்தினங்கள், வைரங்கள், அருமையான சாராயம் முதலியன வெனீஸ் நகருக்குள் கீழ்த்திசைக் கப்பல்களில் வரும்.

இவற்றை வாங்குவதற்கு ஜெர்மனி, ஸ்பெயின், இங்கிலாந்து முதலிய ஐரோப்பிய நாடுகளிலிருந்து வணிகர்கள் வெனீஸுக்கு வருவதுண்டு. ஜெர்மனியிலிருந்து, உலோகத்தால் செய்யப்பட்ட பொருள்களும், இங்கிலாந்திலிருந்து உயர்ந்த கம்பளிகளும், வட நாடுகளிலிருந்து [1]பர் என்னும் மெதுவான ஆட்டுமயிர்ச் சுருள்களும் வந்தன. இப் பண்டங்களை வெனீஸில் மாற்றுவார்கள். ஆதலின் கீழ்த்திசை வாணிபமும், மேல் திசை வாணிபமும் கூடுமிடமா யிருந்தது வெனீஸ் நகரம் என்று கூறலாம்.

## 2. போலோக்கள்

இந்நகரில்தான் [2]மார்க்கோ போலோ பிறந்தார். அவர் இளைஞராயிருந்த காலத்திலேயே அவருடைய தந்தையரான [3]நிகோலோ போலோ என்பவரும் சிறிய தந்தையரான [4]மேபியோ போலோ என்பவரும், வாணிப நிமித்தம் கீழ்த்திசை சென்றிருந்தார்கள். அவர்கள் போய்ப் பத்து ஆண்டுகள் ஆகியிருந்தன. அப்போதுதான் மார்க்கோ போலோவுக்குப் பதினைந்து ஆண்டுகள் நிரம்பின. அவருக்குத் தம்முடைய தந்தையார், சிறிய தந்தையார் வாணிப நிமித்தம் நகர் நீங்கினது நினைவே இல்லை. அவர்கள் போனவிவரம் அவருக்கு மற்றவர்கள் சொன்னார்கள். அவர்கள் யாருமறியாத ஆசியா நாடுகளுக்குள் நெடுந் தொலைவில் போயிருந்தார்கள் எனவும், அதிக

1. Fur. 2. Marco Polo. 3. Nicolo Polo.
4. Maffeo Polo.

தொலைவு பயணமானதால் திரும்பிவரக் காலத்தாழ்வு ஆகும் என்றும் சொன்னார்கள். அவர்கள் போயிருந்த நாடுகள் ஒரு பெரிய மன்னரால் முறைமையுடன் ஆளப் பட்டு வந்தமையால் அவர்களுக்குக் கேடு எதுவும் நேர்ந்திருக்காது என்றும் பேசினார்கள்.

## 3. மார்க்கோவின் இளமை

மார்க்கோ பதினைந்து வயது சிறுவர். அவர் அந் நாட்டுச் சிறுவர்களைப் போலவே கப்பற்றுறைகளுக்குப் போவார். ஆனால் மற்றச் சிறுவர்களுக்கும் இவருக்கும் ஒரு வேற்றுமை யுண்டு. மற்றையோர் கப்பல்களைச் சுற்றிக் கடலில் விளையாடுவார்கள். ஆனால் மார்க்கோ போலோ மட்டும் கப்பலோட்டிகள் (மாலுமிகள்) வந்து கூடும் கடைகளில் உட்கார்ந்துகொண்டு மாலுமிகள் செய்த பயணங்களின் வரலாறுகளை அவர்கள் சொல்லக் கேட்பார். அக் கதைகளைக் கேட்பதில்தான் மார்க்கோ போலோவுக்கு விருப்பம் மிகுதி. கடலில் இறங்கிக் குதித்து விளையாட அவர் விரும்பவில்லை. வியப்பும், விந்தையும், புதுமையும் நிறைந்த நாடுகளைக் கடந்து வரும் கப்பற்காரர்களின் கதைகளைக் கேட்கவேண்டு மென்ற உணர்ச்சியே அவருக்கு. நாட்கணக்கில் கரையில் தங்கிக் கரைநோக்கி வரும் கப்பல்களுக்காக ஆவலுடன் அவர் காத்திருப்பார். நெடுந் தொலைவில் ஒரு சிறு புள்ளி தோன்றினாலும், ஒரு கப்பல் கரை நோக்கி வருகிற தென்று ஆர்வத்தால் துள்ளிக் குதிப்பார். கப்பல் கரை சேர்ந்ததும், தன்மையுள்ள ஒரு மாலுமியை அணுகி, "நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்," என்று கேட்டுவிட்டு அவர் சொல்வதை ஆர்வமுடன் ஆழ்ந்து அப்படியே கேட்டுக்கொண்டிருப்பார்.

இவ்விதமாக, ஒற்றைக்கால் மக்கள் உள்ள நாடுகள், நெற்றியில் ஒற்றைக்கண் படைத்த அரக்கர்கள் நிறைந்த இடம், தலையற்றுத் தோள்களில் கண்கள் உள்ளவர்கள் வாழ்ந்த இடம், வேதாளங்கள் பேய்கள் நடமாடும் பாலை நிலங்கள், மக்களை உண்ணும் ஐம்பதடி உயரமுள்ள அரக்கர்களுடைய இருப்பிடங்கள் முதலியன பற்றி மாலுமிகள் சொல்ல, மார்க்கோ மிக்க விருப்புடன் கேட்பார். இவ்வாறு கேட்கும் பொழுது தம் தந்தையார், சிறிய தந்தையாரைப் பற்றிய கவலை மார்க்கோவுக்கு ஏற்படும். [1]மங்கோலியர்களும் [2]தார்தாரியரும் நிறைந்த நாட்டில் ஐரோப்பியர் கேடின்றி எவ்வாறு இருக்க முடியும் என மார்க்கோபோலோ ஐயப்படுவதுண்டு. இவ்விதமாகத் தம் தந்தையார், சிறிய தந்தையார் திரும்பி வருவார்கள் என்ற நம்பிக்கையை நாளடைவில் சிறிது சிறிதாக இழந்து கொண்டேதான் மார்க்கோ அன்றாடம் கப்பற்றுறைக்கு வருவது வழக்கமாயிற்று.

## 4. போலோக்கள் திரும்புதல்

சில நாட்களில் புதுமையான உடைகள் அணிந்திருந்த இருவர் ஒரு கப்பலில் வந்து இறங்கினார்கள். ஆம்! அவர்கள்தான் மார்க்கோவின் தந்தையும் சிறிய தந்தையும். அவர்கள் பெருஞ் செல்வராகவும், பற்பல இடங்களைப் பார்த்தவராகவும் காணப்பட்டார்கள். அவர்களைக் கண்ட மார்க்கோ போலோ களிப்பினால் கூத்தாடினார்.

"நீங்கள் என்னென்ன புதுமைகளைப் பார்த்தீர்கள்? எனக்குச் சொல்லுங்கள், சொல்லுங்கள்," எனத் துடித்துக்கொண்டு வேண்டினார்.

---

1. Mongols. 2. Tartars.

அவருடைய தகப்பனார் காட்டுக் குதிரை வீரர்கள், மந்திரவாதிகள் முதலியவர்களைப் பற்றியும், பூதங் களும் பிசாசுகளும் நிறைந்த பாலைவனங்களைப்பற்றியும் சொன்னார்கள். தவிரவும் ஆசியாவின் நாடுகளுக்கும் கடல்களுக்கும் ஆயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள வியப்பான ஒரு நாட்டைப்பற்றி அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: "வெனீஸ் நகரந்தான், செல்வத்திலும், வனப்பிலும், வலிமையிலும் மிகச் சிறந்ததென்றும், வெனீஸ் மக்களே மிகச் சிறந்தவர்கள் எனவும் நீங்கள் நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். ஆனால் எங்கள் பய ணங்களில் நாங்கள் மிகச் சிறந்த, அழகான பல நகரங் களைப் பார்த்திருக்கின்றோம். அவற்றோடு வெனீஸ் நகரை ஒப்பிட்டால் அது ஒரு இருண்ட முடுக்குப் போலாகும். [1]யாங்ட்சிகியாங் நதிக்கரையில் [2]ஹாங்சோவ் என்ற நகரம் ஒன்று இருக்கின்றது. வெனீஸ் நகரைப் போலவே அது கால்வாய்கள் நிறைந்தது. ஆனால் அந் நகரில் குறுக்கும் நெடுக்குமாகப் பன்னீராயிரம் பாலங் கள் இருக்கின்றன. அவை அனைத்தும் கற்களால் கட்டப்பட்டிருக்கின்றன. அந்நகரம் வெனீஸ் நகரைப் போல் பதினைந்து மடங்கு பரப்புள்ளது. அதன் முதன் மையான தெரு இருநூறு அடி அகலமுள்ளது. அதன் இருபுறங்களிலும் வீடுகள், தோட்டங்கள், கடைகள், அரண்மனைகள், கோவில்கள் நிறைந்திருக்கின்றன. கால்வாய்களின் ஓரங்களில் பெரு வணிகர்களுடைய பொருட் களஞ்சியங்கள் இருக்கின்றன. அவர்களை நோக்க நாம் ஏழைகளே யாவோம். உலகில் உள்ள வாசனைப் பொருள்கள், பட்டுவகைகள், முத்துக்கள் முதலியன யாவும் அந்நகரின் கடைகளில் வந்து குவி

1. Yangtze-si-Kiang. 2. Hangchow.

கின்றன. விலை உயர்ந்த ஆடைகளும், நகைகளும் அணிந்துகொண்டு ஆடவரும் மகளிரும் அந் நகரின் தெருக்களில் நடமாடுகின்றனர். இதைப்போன்ற நகரங்கள் இன்னும் பல ஆங்காங்கு இருக்கின்றன," என முடித்தார்கள்.

## 5. வெனீஸ் மக்களின் ஐயுறவு

இவற்றையெல்லாம் வெனீஸ் மக்கள் வியப்புடன் கேட்டுக்கொண்டிருந்தார்கள். வெனீஸ்தான் உலகிலேயே மிகச் சிறந்த நகரம்; வெனீஸ்காரர்கள் தாம் உலகிற் சிறந்தவர்கள் என்று அவர்கள் நினைத்தார்கள். வெனீஸில் ஒருவன் பிறந்தால், "உலகப் பெருமகன் ஒருவன் தோன்றிவிட்டான்," என்று பேசுவது அவர்கள் வழக்கமாயிருந்தது. இத்தகைய மனப்பான்மையுள்ள அவர்களுக்கு வெனீஸைவிட இன்னொரு நகரம் சிறந்ததெனக் கேட்டுக்கொண்டிருக்க மனம் பொறுக்கவில்லை.

தம் தந்தையாருடைய கதைகளைக் கேட்டுத் தம் நகரமக்கள் ஐயப்படுவதை மார்க்கோ போலோ கண்டார். தம் தந்தையார் கூறியவை யெல்லாம் உண்மைதானோ வென மறுமுறையும் கேட்டார்.

அதற்கு அவர்கள் மறுபடியும் தாங்கள் சீனவுக்குப் போகும்பொழுது மார்க்கோ போலோவையும் தங்களுடன் அழைத்துக்கொண்டு போய்த் தாங்கள் கண்ட காட்சிகளை நேரில் காட்டுவதாகச் சொன்னார்கள்.

மார்க்கோ போலோவின் தகப்பனும், சிறிய தகப்பனும் முன்சொன்னபடி தங்கள் நகரமாகிய வெனீஸுக்குத் திரும்பும் வழியில் ஆசியாக் கண்டத்

தின் நடுப்பகுதியில் ஆண்டுவந்த [1]கான் என்னும் அரசரைப் பார்த்து வர விரும்பி [2]பொக்காரா என்னும் நகருக்குச் சென்றார்கள். ஆனால் அந்நகரில் பாரசீக நாட்டுக் கான் அரசருடைய தூதுவர்கள் அவர்களை [3]பீகிங் நகருக்கு வருமாறு அழைத்துச் சென்றார்கள். அதன்படிதான் அவர்கள் சீனாவுக்குச் சென்றது. சீனா வில் [4]குப்லேகான் என்னும் அரசர் அவர்களை மிகுந்த அன்புடன் ஆதரித்தார். அவர்களுடைய நாடு, நாகரிகம், பழக்க வழக்கங்கள் முதலியன பற்றி விவரமாகக் கேட்டார். அவர்களுடைய அறிவுவளம், விநயம், நற் பழக்கங்கள் முதலியன பற்றி அறிந்துகொண்ட கான், தம்முடைய நாட்டு மக்களுக்கு ஆசிரியராக இருக்கக் கூடிய நூற்றுவரை அனுப்பித் தருமாறு [5]கத்தோலிக்க சமயத் தலைவரான [6]போப் ஆண்டவருக்கு ஒரு கடிதம் எழுதிக் கொடுத்து, அந்த நூற்றுவரை அழைத்துக் கொண்டு சீனாவுக்கு மறுபடியும் வருமாறு [7]போலோக் களை வெனீஸுக்கு அனுப்பினார்.

## 6. போலோக்களின் இரண்டாம் பயணம்

அவ்வாறே இரண்டு ஆண்டுகள் கழித்து போலோக் கள் மறுபடியும் சீனாவுக்குப் போக ஆயத்தமானார்கள். ஆனால், குப்லேகான் கேட்டபடி நூறு ஆசிரியர்களை அழைத்துக்கொண்டுபோக முடியவில்லை. இரண்டுபேர் களை மட்டுந்தான் போப் அனுப்பினார். அவர்களுடன் மார்க்கோவையும் அவருடைய தகப்பனாரும் சிறிய தகப்பனாரும் அழைத்துக்கொண்டு போனார்கள்.

1. Khan. 2. Bokhara. 3. Peking.
4. Kublai khan. 5. Catholic. 6. Pope.
7. Polos.

சீன நாட்டில் [1]சாண்ட் என்னும் இடத்திலிருந்த பெரிய அரண்மனை இந்த மேல்நாட்டு விருந்தினர்க்காக மிகவும் சிறப்பாக அலங்கரிக்கப்பெற்றிருந்தது. அவர்களுக்காக ஏற்படுத்தப்பெற்றிருந்த வரவேற்பு மண்டபம் மிகவும் பெரிதாகவும் வனப்பு மிகுந்ததாகவும் இருந்தது. பருத்த, சிவந்த தூண்கள் மேல்தளத்தைத் தாங்கி நின்றன; சுவர்களில் யாளிகள், பலவித பறவைகள், விலங்குகள் முதலியன சித்திரிக்கப்பட்டிருந்தன.

## 7. குப்லைகான் மார்க்கோ உறவு

அவற்றைப் பார்த்த இளம் மார்க்கோ மலைத்துப் போனார். தாம் கண்ட அக் காட்சி கனவோ, நனவோ என ஐயுற்றார். [2]குப்லைகான் அரசிருக்கையில் வீற்றிருந்தபடியே புன்முறுவல்பூத்த முகத்துடன், மலைத்துப்போய் நின்ற இளம் மார்க்கோவை அன்பு கனியப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"இவ்விளைஞர் யார்?" என்று [3]நிகோலோ போலோவைக் கான் கேட்டார்.

"ஐயனே! இவன் என் மகன்; தங்கள் ஊழியன்," என நிகோலோ பதில் சொன்னார்.

"அவரைப் பார்க்க நான் மிகவும் மகிழ்கின்றேன். அவருடைய வரவு நல்வரவாகுக," என்று குப்லைகான் கூறி அவர்களுடைய பயண விவரங்களைக் கேட்டார்.

நிகோலோ போலோ தங்கள் பயண வரலாற்றைப் பின்வருமாறு கூறினார்.

---

1. Chand. 2. Kublai khan. 3. Nicolo Polo Khan.

## 8. மார்க்கோவின் பயண வரலாறு

"நாங்கள் மூன்றரை ஆண்டுகள் பயணஞ் செய்தோம். வெனிஸ் நகரை விட்டுப் புறப்பட்டு [1]ஆக்ர் என்னுமிடத்துக்குக் கப்பலில் போனோம். அங்கிருந்து [2]பாக்தாத் பட்டணம் வந்து அங்குச் சில நாட்கள் தங்கினோம். அது ஒரு அழகான நகரம். அங்குப் பேரீச்ச மரங்கள் நிறைந்திருக்கின்றன பொன் வேலைப்பாடுகள் செய்த பட்டு, வெல்வெட் உடைகள் அங்கே ஏராளமாகத் தயாரிக்கப்படுகின்றன. அங்குள்ள மக்கள் எல்லோரும், அறிவியல், சட்டம், வானநூல் முதலியவற்றைக் கற்றுத் தேர்ந்து அறிஞராகவும், நாவன்மையுடையவர்களாகவும் இருக்கின்றார்கள். பிறகு நாங்கள் [3]பாரசீக நாட்டின் வழியே பயணஞ் செய்துகொண்டு வரும்பொழுது வெப்பந் தாங்கமுடியாமல் என் மகன் நோயடைந்தான். அவனை மலைச்சாரலுக்கு நான் அழைத்துப்போக, மலைக்காற்று அவனுக்கு நலம் அளித்தது. அவன் நோய் தெளிய ஓராண்டு ஆயிற்று. அதன் பின் நாங்கள் [4]'பாக்' என்னும் இடம் வந்தோம். [5]பாமீர் மேட்டின் சரிவுகளில் தட்டித் தடுமாறிக்கொண்டு [6]காஷ்கார் என்ற இடத்துக்கு வந்துசேர்ந்தோம். அங்கிருந்து [7]யார்க்ஹண்டு, [8]கோட்டான் இவற்றைத் தாண்டி [9]லோப்நார்க்குத் தெற்கு ஓரத்திலேயே போய் [10]ஆர்டோஸ் தாண்டினோம். [11]பீகிங் நகரத்தைக் காண எங்களுக்குப் பேராவலாக இருந்தது. கடைசியில் இங்கு வந்து சேர்ந்தோம்.

---

1. Acre. 2. Bagdad. 3. Persia. 4. Balkh.
5. Pamir. 6. Kashga. 7. Yarkhand.
8. Khotan. 9. Lob Nor. 10. Ardos.
11. Peking.

அதைக் கேட்ட குப்லேகான் மார்க்கோவை உற்று நோக்கி அவருக்கு நோய் குணமாகி இராவிட்டால் தம் அரண்மனையிலேயே வைத்துக்கொள்ளுவதாகவும், அங்கே அவரை வலுவுள்ளவராகச் செய்வதாகவும் சொன்னார். மார்க்கோபோலோவிடம் கான் மிகுந்த அன்பு பாராட்டினார். நுட்பமாக உற்றுநோக்கியறியும் ஆற்றல் மார்க்கோவிடம் இருந்ததைக் கான் கண்டறிந்தார். அவரைத் தமது ஊழியத்தில் அமர்த்திச் சிறப்பாகப் பயன்படுத்திக்கொள்ளலாம் எனவும் நினைத்தார். அவர்கள் இருவரும் நெருங்கிய நண்பர்களானார்கள்.

## 9. மார்க்கோவின் சீன உள்நாட்டுப் பயணங்கள்

குப்லேகான் மார்க்கோவைத் தம்முடைய பரந்த இராச்சியமெங்கும் போய்ப் பார்த்து வர அனுப்பினார். சிலகாலம் ஒரு பகுதியை ஆளவும் அவரை அமர்த்தினார். கான் ஆண்ட நாட்டில் மக்களின் பழக்க வழக்கங்களைப் பற்றிய கதைகளை மார்க்கோபோலோ கானுக்குச் சொல்லுவார். நாடெங்கும் அழகும், அமைதியும், செல்வமும், வாணிபமும், படிப்பும், படிப்பாளிகளும் நிறைந்திருந்ததை மார்க்கோபோலோ உருவகப்படுத்திக் கானுக்குக் கூறுவார்.

இக் கதைகளைக் கேட்கக் கானுக்கு மகிழ்ச்சியால் மனந்துடிக்கும்.

அதுவரையில் தம்முடைய ஆட்கள் அத்தகைய வரலாறுகள் எதுவும் சொன்னதில்லை. வேறெந்தக் கதைகளையும் கேட்பதைவிடத் தம் மக்களுடைய வாழ்க்கையைப் பற்றிய விவரங்களைக் கேட்டுக்கொண்டிருக்கலாம் என்று கான் முடிவுசெய்தார்.

## 10. அவரது சாட்சியம்

மார்க்கோபோலோ சீன நாடு எங்கும் போய்ப் பார்த்தார். சீனுவுக்கு அப்பால் உள்ள சைபீரியா, கோபி பாலைவனம், திபேத்து முதலான இடங்களைக் கூடப் போய்ப் பார்த்தார். அவ்வாறு அதுவரையில் ஐரோப்பியர் போய்ப் பார்க்காத பல இடங்களையும் காட்சிகளையும் மார்க்கோபோலோ பார்த்தார். தாம் போன இடங்களில் எல்லாம் தாம் கண்ட காட்சிகளை நினைவாகக் குறித்துக்கொண்டார். ஆங்காங்குள்ள சின்னஞ் சிறு ஊர்களில் தங்கினுர். ஆங்காங்கு வழங்கிய பல மொழிகளைக் கற்ருர். அங்கிருந்த நாடோடி மக்களுடன் பல விடங்களில் சுற்றினுர். பிறகு தலைநகருக்குப் போய்க் கானுக்குத் தாம் கண்டு, கேட்ட வரலாறுகளைச் சொல்லுவார். அதனுல் கான் மார்க்கோவை நன்குமதித்துப் பாராட்டினுர்.

மார்க்கோ சிறுவரா யிருந்தபொழுது ஐரோப்பிய மக்கள்தாம் நாகரிகத்திலும் படிப்பிலும், வாழ்க்கையிலும் சிறந்தவர்கள் எனவும், அவ்வளவு சிறப்பானவர்கள் உலகில் வேறு எங்கும் இல்லை எனவும் நினைத்துக் கொண்டிருந்தார். ஆனுல் சீன நாட்டையும் அதன் செல்வத்தையும், சீன மக்களுடைய வாழ்க்கையையும், வாழ்க்கை நலங்களையும் கண்ட பிறகு அவர் அடைந்த வியப்புக்கு எல்லையே இல்லை.

## 11. சீனர்களுடைய வாழ்க்கை நலங்கள்

சீனர்களுடைய வாழ்க்கை நலங்கள் பல. [1]காகித நாணயத்தை அவர்கள் அக்காலத்திலே செலாவணியில்

1. Paper Currency.

கொண்டிருந்தனர். [1]நிலக்கரியின்பயன் அவர்களுக்குத் தெரிந்து இருந்தது. அதை அவர்கள் பயன்படுத்தினார் கள். [2]நெருப்பு அணைக்கும் படையும் [3]நெருப்பு எதிர்க்கும் கட்டிடங்களும் சீனாவில் நிறைந்திருந்தன. மருந்துச் சாலைகள் ஆங்காங்கு இருந்தன. சீன மக்கள் அழகாகவும் நற் ழுக்க முள்ளவர்களாகவும் இருந்தனர். அவர்கள் நாணயமுள்ளவர்களாகவும், அமைதியுடையவர்களாக வும் இருந்தார்கள். கலகமே கிடையாது. அதனால் யாரும் ஆயுதங்களை வைத்திருக்கவில்லை.

சீன அரசர் இரக்கமும் மாட்சிமையும் நிறைந்த வர். ஈகைத்தன்மை யுள்ளவர். விளைவு குன்றிய காலத்திலும், மக்களிடையே கொள்ளை நோய் பரவி யிருந்த காலத்திலும் அவர்கள் கொடுக்கவேண்டிய வரி விடுதலை செய்யப்படுவதுண்டு. அரசர் தம்முடைய இருப்பிலிருந்து தானியங்களும், ஆடு மாடுகளும் அனுப்பி மக்களுக்கு உதவி செய்வது வழக்கம். ஏழைகளுக்கும் வேலையற்றவர்களுக்கும்தான் பொருள் உதவி செய்தார். இவற்றையெல்லாம் [4]மார்க்கோ போலோ குறித்து வைத்துக்கொண்டார்.

## 12. போலோக்கள் வெனீஸ் திரும்புதல்

இவ்வாறு பதினேழு ஆண்டுகள் கழிந்தன. சீனாவில், கான் அரண்மனையில் இருந்த போலோக்கள் தங்கள் இறுதிக் காலத்தைத் தங்கள் சொந்த ஊராகிய வெனீஸில் கழிக்க விரும்பினார்கள். ஆனால் [5]குப்லைகான் அவர்களைச் சீனாவிலிருந்து அனுப்ப விரும்பவில்லை. அச்சமயத்தில் பாரசீக நாட்டுக் கான் ஒரு மங்கோலியப் பெண்ணை மணக்க விரும்பினார். அம் மண

1. Coal. 2. Fire Petrol. 3. Fire Proof buildings.
4. Marco Polo. 5. Kublai khan.

மகளை [1]பீக்கிங்கிலிருந்து பாரசீகத்துக்குச் சேமமாக அழைத்துப் போகத் தகுந்தவர்கள் [2]போலோக்கள்தாம் எனக் குப்லைகான் உணர்ந்தார். அவ்வாறே அம் மங்கோலிய மணமகளைப் பாரசீககான் அரண்மனையில் விட்டுவர போலோக்களை அனுப்பினுர். அம் மணப் பெண்ணை அழைத்துக்கொண்டு போலோக்கள் புறப் பட்டார்கள். இடர் இன்றிப் பயணஞ் செய்வதற்காகக் கடல் வழியே போனுர்கள். அப் பயணம் இரண்டு ஆண்டுகள் நீடித்தது. [3]சீனக்கடல், [4]மலாக்கா நீர்ச்சேர்த்தி கள் வழியே [5]சுமத்ராவைத் தாண்டி [6]இலங்கைத் தீவில் தங்கினுர்கள். அத் தீவைப் பார்த்தபின் இந்தியாவின் [7]மலையாளக்கரை வழியாக அரபிக்கடலில் பயணஞ்செய்து பாரசீக வளைகுடாவுக்கு வந்தார்கள். அங்கு [8]ஆர்மஸ் துறையில் கரையேறிப் பாரசீகக் கான் அரண்மனைக்குப் போய் அவ்வரசனுடைய மணமகளை அங்கே விட்டார் கள். அப்பொழுது சீன மன்னனுகிய குப்லைகான் இறந்துவிட்டதாகச் செய்தி வந்தது. போலோக்கள் தங்களை ஆதரித்த மன்னன் இறந்தமை குறித்து மனம் வருந்தித் தங்கள் நகரமாகிய வெனீஸ் போய்ச் சேருவ தென்று முடிவு செய்தார்கள்.

போலோக்கள் இருபது ஆண்டுகளுக்குப் பின் தங் கள் சொந்த ஊருக்கு வந்தபொழுது அவர்களை யாரும் அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லை அவர்கள் தார்தாரிய உடைகள் அணிந்து வந்திருந்தார்கள். தாங் கள்தாம் போலோக்கள் என்று அவர்கள் சொல்லிக்கூட வெனீஸ் நகரத்தார் அவர்களை நம்பவில்லை.

---

1. Peking. 2. Polos. 3. China sea.
4. The Strait of Malaca. 5. Sumatra.
6. Ceylon. 7. West Coast of India. 8. Ormuz.

பின்னர்ப் போலோக்கள் தங்கள் நகர மாந்தர்க்கு ஒரு விருந்தளித்துத் தாங்கள் போய் வந்த வரலாறு களைச் சொன்ன பிறகுதான் அவர்கள் போலோக்கள் என்று நகரமக்கள் நம்பினார்கள்.

மார்க்கோ போலோ தாங்கள் கண்ட விந்தையான காட்சிகளைப் பற்றிச் சொன்னபொழுது வெனீஸ் மக்கள் நம்பவில்லை. அவர் சொன்னவை யெல்லாம் வெறும் பொய் என்று நினைத்தார்கள்.

## 13. மார்க்கோவின் நூல்

ஆனால் மார்க்கோ போலோ தம்முடைய பயணங்களை எல்லாம் [1]**மார்க்கோ போலோவின் புத்தகம்** என்னும் ஒரு புத்தகமாக எழுதினார். முதலில் அப் புத்தகத்தில் உள்ள கருத்துக்களை வெனீஸ் மக்கள் நம்ப மறுத்தாலும் நாளடைவில் ஊன்றிப் பார்த்தவர்கள் தங்கள் உலகப் படங்களைக் கொண்டு வந்து மார்க்கோபோலோவின் புத்தகத்தில் கண்ட விவரங்களுக்கிணங்க அவற்றை அமைத்துக் கொள்ளலாயினர். ஆசியாக் கண்டம் நெடுக முதல் முதல் ஒரு பயண வழி கண்டு, அவ்வழி நெடுக உள்ள மக்கள் இனத்தைப் பற்றி மற்றவர்களுக்குத் தெரிவித்தவர் மார்க்கோ போலோ தான். சீன நாட்டைப் பற்றியும், அதன் செல்வம், சிறப்பு, அரசாட்சி முதலியன பற்றியும் முதலில் ஐரோப்பியருக்குத் தெரிய வந்தது மார்க்கோபோலோ எழுதிய புத்தகத்தின் வாயிலாகத்தான். ஐரோப்பிய வணிகர் பலர்க்கு அவருடைய புத்தகம் பேருதவியாக இருந்தது. அவருக்கு வெகு காலத்துக்குப் பின் பற்பலர் அவ்வப்போது பயணஞ்செய்து உலகின் வேறு பாகங்களைக் கண்டறிந்து வந்தார்கள்.

---

1. The Book of Sir Marco Polo.

# உ. கிறிஸ்தபர் கொலம்பஸ்

பதினைந்தாம் நூற்றாண்டில் ஐரோப்பிய நாடுகள், கீழ்த்திசையிலுள்ள சீனா இந்தியா முதலிய ஆசியாக் கண்டத்து நாடுகளோடு வாணிபஞ் செய்ய முயற்சித்தன. மார்க்கோபோலோ என்னும் ஓர் இத்தாலியர் கீழ்த்திசை நாடுகளுடன் வாணிபஞ் செய்வதற்காக ஆசியாக்கண்டத்தின் தென்மேற்குப் பகுதி வழியே ஒரு வழி கண்டுபிடித்தார். அவ் வழியே வாணிபம் பெருகியது.

## 1. மார்க்கோ ஏற்படுத்திய கீழ்த்திசை வழி

கி. பி. 1453-ல் துருக்கியர் ஆசியாவின் தென்மேற்குப் பகுதியையும், மார்க்கோ கண்ட வழியையும் கைப்பற்றினார்கள். அதனால் ஐரோப்பிய நாட்டினர் தங்களுடைய தங்கமும் வெள்ளியும் கொண்டு கீழ்த்திசை நாடுகளுக்கு அவ் வழியே செல்வது இன்னல் நிறைந்ததாயிருந்தது. எனவே கீழ்த்திசை நாடுகளுக்கு வேறொரு வழி காணவேண்டி ஐரோப்பியர் பெரிதும் முயன்றனர்.

## 2. கொலம்பஸ் இளமை

அக்காலத்தில் [இத்தாலி நாட்டின் வடமேற்குக் கரையிலிருந்த [1]ஜினோவா வென்னும் நகரில் கி. பி. 1450-ல் [2]**கிறிஸ்தபர் கொலம்பஸ்** பிறந்தார். அவருடைய தந்தை ஒரு நெசவாளி. கொலம்பஸ்] சிறுவராயிருந்தபொழுது தம் தந்தையினுடைய தொழிலைக் கற்று வந்தார். எனினும் அவருக்கு அத் தொழிலில் ஊக்கம் உண்டாகவில்லை. ஆனால் மரக்கலங்களில் வேலை செய்வது அவ

1. Genova. 2. Christopher Columbus.

ருக்கு விருப்பத்தைத் தந்தது. [1]பேவியா என்னுமிடத்தி லிருந்த ஒரு பல்கலைக் கழகத்தில் [2]வான நூல், [3]தரைக் கணக்கு, [4]தரை நூல் பயின்றார். பிறகு மரக்கலங்களில் பணியாற்றத் தொடங்கினார். ஓய்ந்த நேரத்தில் தம் நண்பர்களோடு கீழ்த்திசை நாடுகளைப் பற்றிப் பேசுவார். தாம் சென்ற நாடுகளுக்கு வழி காணச் சென்றவர்களு டைய வரலாறுகளையும் படிப்பார்.

## 3. கோலம்பஸின் துணிபு

அக்காலத்தில் ஜினோவாவிலிருந்த வணிகர்கள் ஐரோப்பிய நாடுகள் பலவற்றிற்கும் போய் வாணிபஞ் செய்தமையால் அவர்களுடைய கலங்கள் எல்லாக் கப்பற் றுறைகளுக்கும் சென்று வந்தன. கொலம்பஸ் முதலில் சிறிது காலம் [5]நடுத்தரைக் கடலில் உள்ள [6]அலெக்ஸாண்ட் ரியா முதலிய துறைகளுக்கும், [7]வெனீஸ் போன்ற நகரங் களுக்கும் சென்று வாணிபஞ் செய்தார். அவ்வப்போது கடற் கொள்ளைக்காரர்களுக்கும் வணிகர்களுக்கும் இடையில் நிகழும் போராட்டங்களில் கொலம்பஸ் கலந்துகொள்ளுவார். கடற் கொள்ளைக்காரர்கள் நடுக் கடலில் திரிவார்கள். வணிகர் தங்கள் பொருள்களோடு வரும்பொழுது அவர்களுடைய வாணிபக் கலங்களைத் தாக்கி அவர்களோடு போரிட்டு அவர்கள் கொணர்ந்த பொருள்களைக் களவாடிச் சென்றுவிடுவார்கள். அக் காலத்தில் கடற்கொள்ளைக்காரர்களைப் பற்றிய அச்சம் வணிகர்களுக்கு மிகவும் அதிகமாக இருந்தது. கொலம் பஸ் இத்தகைய போராட்டங்களில் மிகவும் களிப்போடும்

---

1. Pavia. 2. Astronomy. 3. Geometry.
4. Geography. 5. Mediterranean Sea.
6. Alexandria. 7. Venice.

ஊக்கத்தோடும் கலந்துகொள்ளுவார். ஒரு முறை இம் மாதிரி நடந்த போரொன்றில் வாணிபக் கப்பலும் கொள்ளைக் கப்பலும் தீப்பிடித்து எரியலாயின. கலங்களி லிருந்தோர் அனைவரும் உயிர் தப்ப முயன்று நீரிற் குதித்து நீந்தினர். கொலம்பஸ் பலகை ஒன்றைத் தமக்கு உதவியாகக்கொண்டு ஆறு மைல் நீந்திக் கரை சேர்ந்தார்.

மற்றொரு தடவை கொலம்பஸ் [1]போர்டோ சாண்டோ என்னும் தீவுக்குச் சென்றார். அத் தீவை [2]ஆள்வோரான [3]பெத்ரோகாரியோ என்பவர் கொலம்பஸைப் பற்றி முன் னரே அறிந்தவர் அவர் ஒரு சிறந்த கலஞ்செலுத்து வோரு மாவர். அவர் கொலம்பஸைக் காண விரும்பி வந்தார். அவர் வந்தபோது கொலம்பஸ் [4]அட்லாண்டிக் பெருங்கடலின் படம் ஒன்றைக் கூர்ந்து நோக்கிக்கொண் டிருந்தார்.

"தாங்கள் ஏன் அதை அவ்வாறு பார்க்கின்றீர்கள்?" என்று கேட்டார் பெத்ரோ.

" இந்தப் படத்தைப் பாருங்கள். [5]மதீராவுக்கும் ஆசியாவுக்கும் நடுவில் ஒரே நீர்ப்பரப்பாக உள்ளது. இப் படம் உண்மையான படமா? இடையிலே பெரிய தீவுகள் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது," என் றார் கொலம்பஸ். " எங்கே இருக்குமோ அத் தீவுகள்? யார் கண்டது?" என்று பெத்ரோ மனக் குறையோடு பதிலிறுத்தார்.

" முற்காலத்தில் உண்டான கவிதைகள் அனைத்தும் பொய்யுரையா? குழந்தைகளுக்காகக் கட்டப்பட்ட கன வுரைகளா?"

1. Porto Santo. 2. Governor. 3. Pedro Coreo.
4. Atlantic. 5. Madeira.

" அவைகள் பொய்க்கதைகள்தான் கொலம்பஸ்! நீரும் கவி உள்ளம் படைத்தவரா யிருக்கிறீர். ஆனால் பாய்மரமும் துணியும் மரக்கட்டையும் இன்றிக் கவியி னுலேயே கப்பல் கட்டமுடியுமா? கருத்தற்ற கனுக் காணும் குறைமதியினருக்கு நீர்க்காடு சவக்காடாகும்," என்றார் பெத்ரோ. எண்ணமற் சினந்து ஏற்ற பதிலளிக்க கொலம்பஸுக்கு முடியும். ஆனால் அவர் நண்பருக்கு உண்மையை விளக்க விரும்பினார். " மதீராவும், போர்டோ சாண்டோவும் இங்கே இருப்பதை ஐம்பது ஆண்டுகளுக்கு முன் எவர் அறிந்தார்? அவ்வாறே நெடுந் தொலையில் தீவுகளும் அப்பால் இந்தியாவும் இருப்பதில் ஐயமே இல்லை," என்று கொலம்பஸ் தன்னம்பிக்கையுடன் சொன்னார். பெத்ரோ, குறுநகை செய்தார் " இதுவும் ஒரு நல்ல கவிதை " என்று மறுபடியும் சொன்னார். " இல்லை, அது உண்மையே. தரை ஓர் உருண்டை என்று தாங்கள் அறிவீர்களா? இந்த அட்லாண்டிக் வேலையின் மறுகரையில் இந்தியா உள்ளது," என்றார் கொலம்பஸ்.

" அவ்வாறேயாயினும் கலஞ்செலுத்த வழியறிந்தா ரில்லை. முதல் முதலாக வழிகாண மனவுறுதி கொண் டார் யார்? அவ்வளவு தொலையில் யாரால் கலஞ் செலுத்த முடியும்?"

" என்னால் முடியும்; நான் இந்தியா சென்றே தீருவேன்," என்று கொலம்பஸ் அழுத்தமாகக் கூறினார். பெத்ரோ மனமகிழ்ந்தார்; வியப்படைந்தார்; கொலம் பஸை உற்று நோக்கினார். உயர்ந்த உடலும் கட்ட மைந்து விளங்கிய உறுப்பமைப்பும் அவர் எடுத்த காரியத்தை வெற்றி காணும்வரை விருப்பத்துடன் தொடர்ந்து செய்வார் என்பதை விளக்கின. அமைதி

யோடு விளங்கிய கண்கள் எதையும் ஊடுருவி உண்மை காணும் வன்மை பெற்றிருந்தன! பெருந்தன்மையுள்ள கொலம்பஸ் வெற்றியுறுவார் என்பதை அவர் கண்டார். அவர் கூறுவது உண்மை என்பதை பெத்ரோ அறிந்தார். பெரிய மூங்கில்கள், அகன்று விளங்கிய முகங்களோடுகூடிய சவங்கள் முதலியவை மேற்றிசையிலிருந்து வரும் அலைகளால் கரையோரத்தில் ஒதுக்கப்படுவதையும் அவர் பார்த்திருக்கிறார். இறுதியில் கொலம்பஸ் கொண்ட துணிவைப் பெத்ரோ ஏற்றுக்கொண்டார். "இந்தியாவுக்கு வழி கண்டுபிடிப்பவர் நம்முள் மிகவும் பெருமை யடைவார்," என்று பெத்ரோ கூறினார்.

## 4. இந்தியாவுக்கு வழி காண்டல்

ஆம்! பட்டாடையும், முத்தும், மணியும், நறுமணப் பொருள்களும் நிறைந்து இலங்கும் நாடு இந்திய நாடு. இந்தப் பொருள்களைப் பெறத் தங்களுடைய உயிரையும் இழக்க வேண்டினும் உளந்தளரா ஐரோப்பிய மக்கள் "இந்திய நாட்டிற்கு வழிகாணும் வீரன் எந்நாட்டிற் றோன்றுவான்? என்று தோன்றுவான்? நாமெல்லோரும் அவ்விந்திய நாட்டின் விந்தைகளைக் காணும் வாய்ப்பை என்று நமக்கு அளிப்பான்," என இமையா நாட்டத்தவராயினர். அரசவையிலே இந்திய நாட்டுக்கு வழிகாண்டல் பற்றியே பேச்சு. நாடோறும் [1]கம்மியர் பலர் தத்தங் கலங்கள் கொண்டு கடலிற் சிறிது சிறிதாகத் தொலைகூட்டிச் சென்றனர். நடுக்கடல் சென்றால் மீள வழியறியா திறக்க நேரும் என்று அவர்களிற் பலர் அஞ்சிக் கரையோரமாகவே சென்றனர். அட்லாண்டிக் கடலில் நேர் மேற்கே சென்றார் எவரு

1. Mariners.

மிலர். இவற்றைக் கண்ட கொலம்பஸ் இந்திய நாட்டிற்கு வழிகாண்டல் தம் ஒருவராலேயே இயலும் செயல் என்றெண்ணினர். ஆயினும் கலஞ் சமைத்தற்கும், கம்மியர் பலரைக் கூட்டுதற்கும் இன்றியமையாத நிறைபொருள் அவரிடத்தில்லை. நெசவாளி மகனிடம் மரக்கலம் கட்டவும் மாலுமி சேர்க்கவும் செல்வம் ஏது? "பொருளில்லை என்ற குறை காரணமாகக் குன்றினும் பெரிய பெரும் பொருள் குவிக்கும் பேற்றை ஐரோப்பியர் இழப்பதா? எவரேனும் செல்வரை நாடுவோம்; பொருளுதவி புரியும்படி பரிவுடன் கேட்போம்" என்று கொலம்பஸ் எண்ணமிட்டார். முதலில் [1]போர்சுகல் நாட்டு அரசராகிய [2]ஜான் வேந்தரிடம் தம துள்ளக்கிடையைச் சொன்னர். இந்தியாவுக்கு வழி காண்பதில் அவருக்கு விருப்பம் இருந்தது. [3]ஆப்பிரிக்கா நாட்டைச் சுற்றிச் சென்றால் இந்தியாவுக்கு வழிகாண இயலும் என்று அவர் எண்ணினர். அக்கால மக்கள் தரை தட்டை வடிவானது என்று நினைத்தனர்; கொலம்பஸ் கூறியபடி தரை உருண்டை வடிவானது என்று அவர்கள் நம்பவில்லை. எனினும் கொலம்பஸ் கூறியது உண்மையாவென அறிய, அவர் ஒரு சில கப்பல்களை எவரும் அறியாமல் அட்லாண்டிக் பெருங்கடலூடே செல்லுமாறு அனுப்பினர். சிறிது தொலை சென்றதும் அம் மாலுமிகள் தொடர்ந்து செல்ல அஞ்சித் திரும்பிவிட்டனர்.

## 5. கோலம்பஸின் வாட்டம்

அவர்களுடைய அறியாச் செயலை யறிந்து உளமுடைந்த கொலம்பஸ் [4]ஸ்பெயின் நாடு சென்றார். தம்

1. Portugal. 2. King John. 3. Africa.
4. Spain.

முடன் பிறந்தார் [1]பார்த்தலோமியோ வென்பவரை [2]பிரான்சு நாட்டிற்கும் [3]இங்கிலாந்து நாட்டிற்கும் அனுப்பி அந் நாட்டு அரசினர் ஏதேனும் பொருளுதவி புரிவார்களோ வென்று அறிய முயன்றார். அந் நாட்டரசர்களுக்குத் தங்கள் நாட்டு அலுவல்களே மிகுந்திருந்ததாலும், கொலம்பஸுடைய திட்டம் நிறைவேறுவதற்கு உதவக்கூடிய வளவு செல்வம் அவர்களிடம் இல்லாத காரணத்தாலும் பார்த்தலோமியோ மீண்டும் வந்து உடன்பிறந்தாரிடம் அவ்வேந்தர்களால் ஆகக்கூடிய உதவி ஏதும் இல்லை என அறிவித்தார். அவ்வமயம் ஸ்பெயின் நாட்டிலே [4]பெர்டினண்ட் அரசரும், [5]இசபெல்லா அரசியாரும் ஆண்டுவந்தனர். [6]மூர்சாதியாரோடு அவர்கள் போர் நடத்திக்கொண்டிருந்ததால் கொலம்பசினுடைய திட்டத்தை நோக்க அவர்களுக்கு ஓய்வு இல்லை. எனவே கொலம்பஸ் தமது தாய்நாடாகிய [7]இத்தாலிக்குச் சென்றார். ஆண்டும் அவருக்குத் துணைபுரிவாரில்லை.

## 6. எதிர்ப்பு

அப்போது ஸ்பெயின் நாட்டினின்றும் மூர் சாதியினர் முறியடிக்கப்பட்டுவிட்ட சேதி யறிந்து கொலம்பஸ் ஸ்பெயின் நாட்டிற்கே மீண்டார். நாட்டிறைவரிடம் தமது திட்டத்தைத் தெரிவித்தார். அரசவையினரிற் பெரும்பாலோர் கொலம்பஸிடம் கொதிப்படைந்தனர். "அட்லாண்டிக்கைக் கடப்பதாம்; இந்தியாவை அடைவதாம்; தரை உருண்டையானதாம்; நமது [8]நெறியிறைவர்கள் தரை தட்டையானதென்று

1. Barthalomio. 2. France. 3. England.
4. Ferdinand King. 5. Queen Isabella.
6. Moors. 7. Italy. 8. Priests.

நவின் றிருக்க, இந்த நெஞ்சழுத்தக்காரன் தரை உருண்டையானது என்று கூறுகிறானே! என்ன குறை மதி!" என்று கொலம்பஸ்மீது பொறாமை கொண்ட புல்லர்கள் பழியுரை புகன்றனர்.

கொலம்பஸினுடைய உள்ளம் சற்றே உரமிழந்தது. தம்முடைய எண்ணத்தில் மண் விழுமோவென்று அவர் அஞ்சினார். ஆயினும் மீண்டும் உறுதிகொண்டு நாட்டிறைவரை நாடி வேண்டினார். பத்தாண்டுகள் கழிந்தன; இசபெல்லா இறைவியினுடைய மனம் இரங்கிற்று; கொலம்பஸுக்கு வேண்டியது உதவினாள்.

## 7. புறப்பாடு

ஸ்பெயின் நாட்டிலுள்ள [1]பாலோ வென்னும் துறைமுகத்தை விட்டு 1492-ஆம் ஆண்டு ஆகஸ்ட்டுத் திங்கள் 3-ஆம் நாள் கொலம்பஸ் தமது நீண்ட பயணத்தைத் தொடங்கினார். [2]சாண்டோ மேரியா, [3]பின்டா, [4]நீனா வென்ற மூன்று கப்பல்களும் எண்பத்தெட்டு துணைவர்களும் கொலம்பஸுக்கு உதவும்படி இறைவி பணித்திருந்தாள். கரையில் மக்கள் அனைவரும் கலங்கிய உள்ளத்தோடு கலங்களை நோக்கினர். கொலம்பஸும், அவர் குழுவினரும் மீண்டும் வருவார்களோ என்ற ஐயப்பாட்டுடன் அம் மக்கள் தம்தம் வீடு திரும்பினர். கொலம்பஸும் அவர் குழுவினரும் தம் பயணத்தைத் தொடங்கினர்.

[5]கனேரித் தீவுகளில் அவர்கள் பின்டா வென்ற கலத்தில் ஏற்பட்ட நிலைகேட்டைச் செப்பம் செய்தனர்.

---

1. Palos. 2. Santa Maria. 3. Pinta.
4. Nina. 5. Canary Islands.

## 8. துணைவர்களின் கலகமும் கலக்கமும்

நாள் செல்லச் செல்ல கொலம்பஸுக்கு ஊக்கம் பெருகியது. தாம் இலக்காகக் கொண்ட இந்திய நாட்டுக்கும் தமக்கும் இடையிலுள்ள நீர்ப்பரப்பில் தமது பயணத்தொலை குறைந்துகொண்டு வருவதில் அவருக்கு மகிழ்வு உண்டாயிற்று. கொலம்பஸோடு சென்ற அவரது துணைவர்களுக்கோவெனில் கவலையும் திகிலும் நாளடைவில் உண்டாயின. தம் தலைவரின் உணர்ச்சி மிகுந்த பேச்சைக் கேட்கும்போது அவர்கள் பேச்சொழிந்து நின்றனர். தங்களுக்கு முன்னாலோவெனின் ஓயாது அசைந்து புரளும் பெரு நீர்ப்பரப்பு. இதைக் கடந்து கரை காண வியலுமா? ஐயம் நிறைந்த கண்களோடு அவர்கள் ஒருவரை யொருவர் நோக்கினர். நீல வானையும் நீலக்கடலையும் நோக்கினர்? நெடுந் தொலை சென்றும் தரை கிட்டாவிடில் தங்கள் நிலை என்னும்? தங்கள் நாட்டிலுள்ள தங்களது உறவினருடைய கலக்கமும் எம்மட்டாம்? இவ்வாறு நினைக்க நாளடைவில் அவர்கள் மனதில் ஒருவித அச்சமே குடிகொண்டது.

நாட்கள் வாரங்களாகி, வாரங்கள் மாதங்களாக மாறவும், மருட்சி மேலிட்டு மாலுமிகள் கொலம்பஸை அடிக்கடி தம் நாடு திரும்பிவிடும்படி தூண்டினர். கொலம்பஸ் அதற்காகக் கருத்தழியவில்லை; கலங் கொண்டு கடல் கடக்க வேண்டிய தொலை தாம் முன்னர் திட்டமிட்டதைவிட மிகக் கூடுதலாகவே இருக்குமென்று அவர் உணரலானார். உண்மையாகத் தாங்கள் கடந்த தொலையைத் தாம் அறிவாராயினும் இன்னும் கடக்க வேண்டிய தொலையை மற்றவர்களுக்குக் குறைத்தே கூறி அவர்களுடைய தளர்ச்சியை ஓரளவு

குறைப்பார். ஒரு நாள் கீழ் வானத்தில் நீல நிறத்தோடு கூடிய ஒரு திட்டுத் தோன்றியது. அனைவரும் மகிழ்ந் தனர். இமை கொட்டாமல் அத் திக்கு நோக்கியவாறே கலத்தைச் செலுத்தினர். உச்சிப்போது வந்துற்றது. தாங்கள் காலையில் பார்த்தது ஒரு மேகப்படலம் என் றும், உண்மையில் அது தரையன்று என்றும் அறிந்த போது அவர்களடைந்த வருத்தமும் திகைப்பும் யாவரே விவரிக்க வல்லார்!

தரை அருகில் இருப்பதைக் காட்டக் கூடிய அறி குறிகள் மீண்டும் தென்பட்டன. கடற்பாசிகளும் பறவைகளும் காணப்பட்டன. வரவரப் பாசிகள் அதிக மாயின. நீர் குறைந்து தங்களுடைய கப்பல்கள் அசைக்க முடியாதபடி மணலில் சிக்கிக் கொள்ளும் என்று அனை வரும் அஞ்சினர். கொலம்பஸ் அவர்களுக்கு ஆறுதல் கூறினர். சின்னாட் சென்றதும் கடற்பாசிகள் நீங்கிக் கலங்கள் கவலையற்றுச் செல்லக் கூடிய நிலை வந்தது. எனினும் மாலுமிகள் தொலை அதிகரிப்பதைக் கண்டு அஞ்சினர். கொலம்பஸ் மூளை கலங்கி நின்றார் என்றும், அவரைத் தாம் பின் தொடர்ந்தால் மறு உலகிற்குப் போக வேண்டியதுதான் என்றும் அவர்கள் பேசிக் கொண்டார்கள். ஒரே உறுதியாக இனிக் கொலம்பஸை மேற்செல்லவிடக் கூடாதென்றும், தம் சொல்லை அவர் கேளாவிடில் கலகம் விளைப்பதென்றும் அவர்கள் முடிவு கட்டினர்.

தமது நிலை தாம் கடந்து வரும் தொலைக்கேற்ப இன்னல் மிகுத்து வருவதைக் கொலம்பஸ் அறிந்தார். மீண்டும் ஒருநாள் மாலுமிகளைப் பொறுமையோடிருக் கும்படியும், தரை காணுவிடில் மறுநாளே தாய்நாடு மீள

உடன்படுவதாகவும் சொல்லுவார். அவ்வாறு பன்னுட் கழிந்துவிட்டன; நிலம் இருக்குமிடமோ அறிந்தார்கள் இல்லை. துணைவர்களோ ஓயாது தொல்லை கொடுத்தனர். தமது கலங்கள் நடுக்கடலில் தடுமாற வேண்டுமோ வென்ற எண்ணம் கொலம்பஸுக்கு ஒருபோதும் ஏற் படவில்லை. கரைகண்டு விடலாம் என்ற உறுதியுடனே யிருந்தார். ஆனால் தமது அரும்பெரும் முயற்சியின் பயனை அடைவதற்குள் தமது தோழர்கள் தமது திட்டத் திற்கு ஏதும் ஊறுண்டாக்கக் கூடாதே யென்று அவர் கலங்கினர். கொலம்பஸின் துணைவர்கள் அவரிடம் வந்தனர். இனிப் பயணத்தைத் தொடர்ந்து நடத்தத் தங்களுக்குத் துணிவில்லை யென்றும், உடனே கொலம் பஸ் திரும்பியே ஆகவேண்டும் என்றும் கூறினர்கள். கொலம்பஸ் பொறுமையாக அவர்களுக்கு அறிவு புகட்ட முயன்றார். அவர்கள் ஒரே பிடிவாதமாக மேற்செல்ல மறுத்தனர்.

அவ்வமயம் பறவைக் கூட்டமொன்று தென்மேற் குத் திசை நோக்கிச் செல்லுவதையும், பின்னும் சற்று நேரத்திற்கெல்லாம் இன்னுமொரு பறவைக்கூட்டம் தென்மேற்குத் திக்கையே நோக்கிப் பறப்பதையும் கண்டார். அந்தப் பறவைகள் கரையிலிருந்து நெடுந் தொலை கடலில் பறக்கமாட்டாவென்றும், ஆதலால் தென்மேற்குத் திக்கை நோக்கிக் கலங்களைச் செல்ல விட்டால் தரை அதிவிரைவில் புலனாகும் என்றும் கொலம்பஸ் அவர்களுக்குச் சொன்னார். அவர்கள் அதற் கும் இணங்கவில்லை. அத்திப் பழங்களும், மரப்பலகை யும், செதுக்கப்பட்டு வேலைப்பாடு அமைந்த கொம்பு ஒன்றும் தண்ணீரில் மிதந்து வந்தன. கொலம்பஸ் அவை களையும் அவர்களுக்குக் காட்டினர். கரை அருகில்

உள்ளது என்றும், அதில் மக்கள் வாழக்கூடுமென்றும் கொம்பஸ் கருதினர்.

## 9. தரைகாணல்

அருகில் மனிதர்கள் இருப்பதற்கான அறிகுறிகளும் அவர்கள் இருப்பிடமும் இருக்கக் கூடுமென்ற தோற்றங் களும் உண்டானபடியால் மாலுமிகள் அமைதி அடைந் தனர். அன்றியும் முதன் முதலில் கரையைக் கண்ணுறு பவர்க்கு ஒரு நன்கொடை யளிக்கப்படும் என்று இறைவி இசபெல்லா அறிவித்திருந்தபடியால் அனைவரும் விருப் பத்தோடு தென்மேற்குத் திசையை நோக்கியவாறே நின்றனர். 1492-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 12-ஆம் தேதி அவர்கள் அனைவரும் ஒரு தீவில் இறங்கினர்.

## 10. சான் சால்வடார்

கொலம்பஸ் சிறந்த ஆடைகளை அணிந்துகொண்டு, ஒரு கையில் ஸ்பெயின் நாட்டின் கொடியை ஏந்திக் கடவுளுக்கு வணக்கம் செலுத்தினர். அத் தீவுக்கு [1]சான் சால்வடார் என்று பெயரிட்டு அது ஸ்பெயின் நாட்டைச் சேர்ந்ததென்று அறிவித்தார். [இப்போது வாட்லிங் தீவு என்று அத் தீவு குறிக்கப்படுகிறது.] கொலம்பஸ் மீண்டும் புறப்பட்டுப் பல் வேறு தீவுகளைக் கண்டுபிடித்தார்: அவற்றுள் [2]ஹிஸ்பானியோலா என்னும் தீவில் சாந்தாமேரியா தரையில் மோதிவிட்டது. எஞ்சிய இரு கப்பல்களோடும், கிளிகள், புது மிருகங்கள், அத் தீவுகளில் உபயோகப்படுத்திய ஆயுதங்கள் முதலிய வற்றோடும் கொலம்பஸ் தாய்நாடு திரும்பினர். அத்

1. San Salvador 2. Hispaniola.

தீவுகளில் தம்முடன் வந்தவருள் 44 பேர்களைக் குடியிருக்கச் செய்தார்.

### 11. ஸ்பெயின் திரும்புதல், இரண்டாம் பயணம்

அரசரும் அரசியும் கொலம்பஸைக் கண்டு மகிழ்ந்தனர். அவர் கொண்டுவந்த புதுமைப் பொருள்களைக் கண்டு வியந்தனர். அவருக்கு நன்கொடை கொடுத்துப் பெருமைப்படுத்தினர். கொலம்பஸ் மீண்டும் அநேக கப்பல்களுடனும், துணைவர்களுடனும் புறப்பட்டு இன்னும் பல புதிய தீவுகளைக் கண்டுபிடித்தார். ஹிஸ்பானியோலாவுக்குச் சென்றபோது தம் நண்பர்களுக்காகத் தாம் கட்டிக்கொடுத்த கோட்டை கொளுத்தப்பட் டிருப்பதைக் கண்டார். அத் தீவினுடைய வேறொரு பகுதியில் மற்றொரு அழகிய நகரை யுண்டாக்கி அதற்கு இசபெல்லா என்ற பெயரை வழங்கினார்.

அத் தீவின் நடுவில் தங்கந்தோண்டுமிடம் ஒன்றைக் கண்டுபிடித்தார். தன்னுடைய உடன்பிறந்தாரான [1]டைகோ என்பவரை அவ்விடத்தில் அவ்வரசரின் பதிலியாக்கி, மீண்டும் பல தீவுகளைக் கண்டுபிடிக்கச் சென்றார். [2]ஜமெய்கா, [3]க்யூபா வெனுந் தீவுக் கூட்டங்களைக் கண்டுபிடித்தபின் இசபெல்லாவுக்குத் திரும்பினார். ஓயா உழைப்பினால் நோய்வாய்ப்பட்டார். பிறகு ஐந்து திங்கள் கழிந்து குணமடைந்தார்.

ஆங்காங்குக் குடியேறியவர்கள் ஒருவர் மீது ஒருவர் பொறாமையும் வெறுப்பும் கொண்டனர். வெளிநாட்டார் ஒருவரிடம் அடங்கி யிருப்பது அவர்களிற் சிலருக்கு உடன்பாடில்லை. அன்றியும் உள்நாட்டுக் குடிகளை

1. Diego. 2. Jamaica. 3. Cuba.

அவர்கள் வருத்தியபடியால் அவர்களாலும் தொல்லை ஏற்பட்டது. கொலம்பஸ் இத் தொல்லைகளை யெல்லாம் ஒருவாறு தீர்த்துவைத்தார்.

ஏராளமான உள்நாட்டுக் குடிமக்களைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு மீண்டும் ஸ்பெயினுக்குச் சென்றார். அங்கே அவர்களை அடிமைகளாக விற்றார்.

## 12. மூன்றும் பயணம்

மூன்றும் முறையாகப் பல கப்பல்களைச் சேர்த்துக் கொண்டு கொலம்பஸ் அட்லாண்டிக் பயணத்தைத் தொடங்கினார். பல தீவுகளைக் கண்டுபிடித்தார். மறுபடியும் குடியேறியவர்களுக்கிடையே கலவரம் ஏற்பட்டதால் ஹிஸ்பானியோலா சென்று அதை அடக்கினார். அரசரும் ஒரு நீதித் தலைவரை அனுப்பிக் கலவரத்தை அடக்கும்படி பணித்தார். அந் நீதித்தலைவர் கொலம்பஸ் மீது ஐயம்கொண்டு அவரை விலங்கிட்டு ஸ்பெயினுக்கு அழைத்துச் சென்றார். வேந்தரும் இறைவியும் அவரைக் கண்டு மனமிரங்கி அவரை விடுவித்தனர்.

## 13. நான்காம் பயணமும் மரணமும்

கொலம்பஸ் தாம் கண்டுபிடித்த தீவுகளுக்கு அப்பால் இந்தியா இருக்கக்கூடுமென்று நினைத்தார். நான்காம் முறையாகப் புறப்பட்டு [1]ஸெயின்ட் லூசியா என்னும் தீவைக் கண்டுபிடித்தார். மீண்டும் நோய்வாய்ப் பட்டமையால் தம் நாடு திரும்ப நேர்ந்தது. இவ்வாறு மிகவும் புகழுடன் வாழ்ந்த கொலம்பஸ் 1506-ல் மாண்டார். மாளும் வரையில் தாம் இந்தியாவை அடுத்துள்ள தீவுக் கூட்டங்களைக் கண்டுபிடித்ததாகவே நினைத்தார்.

---

1. Saint Lucia.

அவர் கண்டறிந்தது அமெரிக்காக்கண்டம் என்று அவருக்குத் தெரியாது.

## 14. ஜினேவா வீரர்

பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் தென் அமெரிக்கக் கடற்கரையை ஆராய்ந்த [1]அமெரிக்கோ வெஸ்புக்கி என்னும் இத்தாலியர் அமெரிக்கா ஒரு கண்டம் என்று அறிந்தார். அன்று முதல் அக் கண்டம் [2]அமெரிக்கா என அழைக்கப்படுகிறது. ஸ்பெயின் நாட்டினர் தங்களுக்கு ஒரு மாபெரும் நிலப்பரப்பைக் கண்டுபிடித்துக் கொடுத்த கொலம்பஸை, "ஜினேவா வீரர்" என வாழ்த்தினர்.

—

1. Amerigo vespucci. 2. America.

# ௩. [1]வாஸ்கோட காமா

## 1. ஐரோப்பியர் வாணிப ஊக்கம்

முன்னாளில் ஐரோப்பிய நாடுகளிற் பல நம் இந்திய நாட்டின் வனப்பையும் வளத்தையும் செல்வத்தையும் அறிந்து இந்நாட்டுடன் வாணிபம் நடத்தப் பெருமுயற்சி செய்தன. நம் நாடு [2]ஐரோப்பாக் கண்டத்திலிருந்து நெடுந்தொலைவிலுள்ளது. ஐரோப்பாவிலிருந்து இந்தியாவிற்கு வாணிபத்தின்பொருட்டு வருவதற்கு ஒரு வழி கண்டுபிடிப்பதில் மிகவும் ஊக்கம் கொண்டவர்களுள் [3]போர்ச்சுக்கல் நாட்டினர் குறிப்பிடத்தக்கவர்கள். அந் நாட்டு இளவரசர் அடிக்கடி பல கப்பற் றலைவர்களை [4]ஆப்பிரிக்காவின் மேற்குக் கரைவழியாக அனுப்பி இந்தியாவுக்கு ஒரு வழிகாண முயன்றார். அவ்வாறு அனுப்பப் பட்டவர்கள் அவ்வப்போது பற்பல இடுக்கண்களில் அகப்பட்டுத் தத்தம் முயற்சி நிறைவேறாது திரும்புவது வழக்கமாயிற்று. இருப்பினும் [5]டயஸ் என்பவர் ஆப்பிரிக்காவின் தென்கோடியில் உள்ள முனைக்குச் சென்று அங்குப் புயல் மிகுதியா இருந்ததைக் கண்டு அஞ்சி அம் முனைக்குப் [6]“புயலடி முனை” என்று பெயரிட்டுத் திரும்பினார்.

## 2. புயலடி முனை “நன்னம்பிக்கை முனை”

போர்ச்சுக்கல் அரசனிடம் தாம் சென்று வருந்திய வரலாற்றைக் கூறினார். அதைக் கேட்டுக்கொண்டிருந்த அரசவை அறிஞர் ஒருவர், அஃது ஆப்பிரிக்காக் கண்

1. Vascoda gama. 2. Europe. 3. Portugal.
4. Africa. 5. Diaz. 6. Stormy cape.

டத்தின் தென்கோடி முனையாதலால் அவ்வழியே சென்றால் இந்திய நாட்டை யடையலாம் என்று தாம் நம்புவதாகவும், அம் முனையைப் புயல்முனை என்று சொன்னால் மீண்டும் அவ்வழிச் செல்ல மாலுமிகள் அஞ்சக்கூடுமென்றும் கூறி, அம்முனைக்கு [1]நன்னம்பிக்கை முனை, அஃதாவது நம்பிக்கையை அளிக்கக்கூடிய முனை, என்னும் பெயரே பொருத்தமானது என்றும் கூறினார். அதன்படியே அம்முனைக்கு நன்னம்பிக்கை முனை என்று பெயர் கொடுத்தார்கள்.

## 3. அறிஞர் தேர்தல்

டயஸ் கைவிட்ட முயற்சியை மீண்டும் துவக்க எண்ணிய அரசர் அறிஞர்களைக் கலந்து செய்வன செய்ய விரும்பினார். அறிஞருள் ஒருவர் கொலம்பஸை அனுப்பலாம் என்று கூறினார். மற்றொருவர் டயஸையே மீண்டும் செல்லுமாறு சொல்லலாம் என்று எண்ணினார். வேறொருவர், "தாங்கள் மேற்கொண்டுள்ள பணியைத் திறமையாகச் செய்து முடிக்கத்தக்கவர் வாஸ்கோட காமா ஒருவர்தான்" என்றும், "அவருக்குத் தான் அச்செயலாற்றுந் திறன் உண்டு," என்றும் கூறினார். அரசர் அதற்கு இணங்கினார்.

அவ்வமயம் வாஸ்கோடகாமா அரசவை அமைந்திருந்த பெருங் கூடத்தின் ஒருபுறமாகச் சென்றுகொண்டிருந்தார். ஒளிவீசும் கண்களோடும், கருந்தாடியுடனும், நல்ல உடலமைப்போடும் உயர்ந்து விளங்கிய வாஸ்கோட காமாவை அரசர் அழைத்துத் தமது விருப்பத்தைத் தெரிவித்தார்.

1. Cape of Good Hope.

## 4. வாஸ்கோவின் மனநிலை

வாஸ்கோ மனம் பூரித்தார். "இந்தியா சென்முல் அங்குள்ள முத்தும் மணியும் மணந்தரும் பொருள் களும் போர்ச்சுக்கலுக்குக் கொண்டுவரலாம். நம் நாட்டுத் தங்கமும் வெள்ளியும் கண்டு இந்தியர் மகிழ் வார்கள். இருநாட்டினரும் வாணிபம் செய்யலாம்; நம் நாட்டிற்கு நல்ல பெருமை; அதுமட்டுமா? 'வாணிப வழி கண்ட வாஸ்கோ வாழ்க' என்று ஐரோப்பியரும் ஆசியாக் கண்டத்தினரும் வாழ்த்துவார்கள். இரு நாட்டினரையும் வாணிபத் துறையில் இணைத்த பெருமை நமக்குரியதாகும். 'அறியாமையை அழித்த அறிஞன்' என்று நம்மை உலகமக்கள் போற்றுவார்கள். நமது புகழ் ஞாயிறுள்ள நாளெல்லாம் ஞாலத்தில் நிலவும்,'' என்று வாஸ்கோ எண்ணி எண்ணி மகிழ்ந்தார்.

## 5. மன்னன் மகிழ்ச்சி

அன்பும் பணிவும் நிறைந்த மனத்தவராகி, வாஸ்கோட காமா அரசர்முன் முழந்தாளிட்டு வணங்கி ஞர். "அரசே! கீழ்நாடும் மேல்நாடும் உறவாட வழி கண்ட நாடு,'' என்று நமது நாட்டை உலகெலாம் ஏத்துதற்கு ஏழையேன் உயிரையும் பொருட்படுத்தாது உழைக்க உளந்துணிவேன்; தாங்கள் என்னிடம் பொறுப் புடன் ஒப்படைத்த அரும்பணியை ஆற்ற அகமகிழ் வுடன் முற்படுகின்றேன்,'' என உரைத்தார். நாட்டி றைவர் உளம் பூரித்தார். "போர்ச்சுக்கல் நாட்டுப் புரவலர் உலகிலே சிறந்த வாணிப வழிகண்டார்,'' என் னும் பெருமையைத் தமக்களிக்கத்தக்கவர் இவரே என்று திடங்கொண்டு அன்புடன் எழுந்துநின்று

"கப்பற்கூட்டத் தலைவ! ஆவன செய்க! வேண்டுவன உதவுவோம்," என்று வாஸ்கோவுக்கு உறுதியளித்தார்.

## 6. பயண ஏற்பாடுகள்

வாஸ்கோ உடனே தமது பணியைத் தொடங்கினார். தமக்கு முன் அம் முயற்சியில் ஈடுபட்டவர்கள் அப் பயணத்தில் அடைந்த வருத்தங்களைப் பற்றியும் அவர்கள் எவ்வாறு அவ்விடையூறுகளைக் களைந்தனர் என்பது பற்றியும் விரிவாக ஆராய்ந்தார். தமக்குப் பயன்படக்கூடிய தரைப்படங்களையும் தாம் குறிப்பாக எவ்வழியே செல்ல நேரும் என்று காட்டும் படங்களையும் ஒருவாறு மனமளந்து வரைந்தார். அடிக்கடி அப் படங்களைக் கூர்ந்து நோக்குவார். அவருடைய மேற் பார்வையில் நான்கு கப்பல்கள் கட்டப்பட்டன. தம்மோடு கூடவருவதற்கென்று வாஸ்கோ நூற்றெழுபது துணைவரைச் சேர்த்துக்கொண்டார். முன்னேற்பாடுகள் ஒருவாறு நிறைவேறின.

## 7. புறப்பாடு

ஒருநாள் இளஞாயிறு அழகாக ஒளி பரப்பிக்கொண்டிருந்தான். வாஸ்கோவும் அவரது துணைவர்களும் தங்கள் பயணத்தைத் தொடங்கினர். சிறுவரும் சிறுமியரும் பெரியோருமாக அநேகர் அவர்களை வழியனுப்புவதற்குக் கடற்கரைக்கு வந்தனர். அவர்களில் பெரும்பாலோர் வாஸ்கோ மறுபடியும் திரும்பி வருவாரென்று நினைக்கவில்லை. அக்கால மக்கள் அறியாமை நிறைந்தவர்கள். கடலில் துணிவுடன் செல்வோரை விழுங்குவதற்காகப் பேய்களும் அரக்கரும் காத்திருப்பார்களென்

றும், வாஸ்கோ அவர்களுக்கு இரையாகி விடுவாரோ வென்றும் அவர்கள் அஞ்சினர். கடல்யானைகள் தம் முடைய கொம்புகளால் கப்பலை உடைத்து நொறுக்கி விடுமென்றும் வேறு பலர் பேசிக்கொண்டனர். சற்று அறிவு தெளிந்தவர்கள் வாஸ்கோ நீர்ச்சுழல்களில் அகப் பட்டுக்கொள்வாரோ வென்று கவலையுற்றனர்; நீர்ச் சுழல்களை விட்டு விலகி வாஸ்கோ செல்லுவாராளுல் வடகிழக்கேயிருந்து வீசும் காற்று அவர்களை ஒருவழிச் செல்லவிடாது என்றும் அஞ்சினர்; இன்னும் முன் னறியா வருத்தங்கள் எவ்வளவோ நேரிடக்கூடுமென்று அவர்கள் கவலையுற்றனர். கப்பல்கள் நெடுந்தொலை சென்ற பிறகு அவர்கள் கண்ணுக்குப் பாய்மரங்கள் தெரிகிறவரை பார்த்துவிட்டு அனைவரும் மலைத்த உள்ளத்தோடு தத்தம் வீடு திரும்பினர்.

## 8. கவலை

வாஸ்கோ தமது துணைவரோடு கடலில் சென்று கொண்டிருந்தார். தமது இலக்கு நிறைவேறுவதற்குள் தாம் எவ்வளவோ தொல்லைகளுக்கு ஆளாக நேரும் என்று அவர் நினைத்தார். தமது அறையிலே தம்முடைய புத்தகங்களையும் தமக்கு உதவக்கூடிய [1]பொறிகளையும் வைத்திருந்தார். அடிக்கடி அவற்றை ஆராய்வார். தம் மனத்தில் தோன்றிய கவலைகளை எள்ளளவும் தம் துணைவர்கள் அறியாவண்ணம் மன உறுதியுடன் இருந்துவந்தார். திங்கள் பல கழிந்தன. வாஸ்கோவினுடைய துணைவர்கள் கவலையடைந்தனர். அடிக்கடி வாஸ்கோவிடம் வந்து, "நாம் இப்போது எவ்வளவு தொலை பயணம் செய்திருக்கிறோம்? இப்

1. Instruments.

போது எங்கே இருக்கின்றோம்?" என்றெல்லாம் கேட்கத் தொடங்கினர்.

## 9. வாஸ்கோவின் துணிவு

வாஸ்கோ அவ்வப்போது அவர்களுக்குத் தக்க விடையிறுத்துவந்தார். பின்னும் சிலகாலம் கழிந்ததும் அவர்களுடைய அச்சம் பெருகியது. "ஒருவேளை வாஸ்கோ நம்மை மறு உலகிற்கே அழைத்துச் சென்று விடுவார்போலிருக்கிறது," என்று பேசிக்கொண்டனர். இதைக்கேட்ட திடமனம் கொண்ட வாஸ்கோ, "பெருமையின்றி இந்த உலகில் வாழ்வதைவிட வேறு உலகம் செல்வதே சாலச்சிறந்தது. மேற்கொண்ட பணியை முடிக்காமல் நான் நாடு மீளமாட்டேன்," என்று தமக்குத் தாமே சொல்லிக்கொள்வார். தொலைப் பயணத்தால் தமக்கேற்படும் அலுப்பையும் இவ்வாறு போக்கிக்கொள்ளுவார்.

## 10. அச்சம்

நாட்கள் பல கழிந்தன. நன்னம்பிக்கை முனையைப் பின்னுஞ் சின்னாட்களில் காண இயலுமென்று வாஸ்கோ உணர்ந்தார். அதனருகே சென்றால் அங்கு ஓயாது வீசிக் கொண்டிருக்கும் புயலில் தம் கப்பல்கள் அகப்பட நேரிடுமோ வென்று அவர் அச்சமுற்றார். மற்றையோரிடம் தமது மனநிலையை அவர் காட்டிக்கொள்ளவில்லை. அம் முனையைத் தமது கப்பல்கள் அணுக அணுக அவர் தம் மனத்தை மிகவும் தேற்றிக்கொண்டார்; "ஏதோ ஒரு பேராபத்தில் சிக்கிக்கொள்ளப் போகிறோம்," என்று அவர் நினைத்தார். தமது கப்பல்கள் உறுதியாக இருக்க வேண்டும் என்றும் தமது துணைவர்கள் மனத்துணிவும்

உடல் நலமும் உள்ளவர்களாக விருக்கவேண்டு மென்றும் இறைவனை இறைஞ்சினார்.

## 11. நோய்

கப்பலில் பயணம் போகிறவர்கள் பச்சைக் காய்கறி களைப் பெரும்பாலும் உபயோகிக்க முடியாது. உப்பிட்ட மாமிசமும் ஊறுகாய்களும் தடித்த ரொட்டிகளும்தாம் அவர்களுடைய உணவுப் பொருள்கள். நெடுநாள் பச்சைக் காய்கறி கீரைகளைச் சேர்த்துக்கொள்ளாதபடி யால் வாஸ்கோவின் துணைவர்கள் [1]நோய்வாய்ப்பட்டனர். அவர்களுடைய கால் கைகள் வீக்கமடைந்தன. ஈரல் வளர்ந்து பல்லை மூடி உணவுகொள்ள முடியாதபடி செய்தது. அவர்கள் அனைவரும் வாஸ்கோவை அணுகித் திரும்பித் தம் தாய்நாடு செல்லலாமென்று வேண்டினர். முன்வைத்த காலைப் பின்வைக்க முடியாதென்று வாஸ்கோ மறுத்துவிட்டார். "பட்டகாலிலே படும்" என்பதுபோல வாஸ்கோவுக்கு மேலும் இடையூறுகள் தொடர்ந்தன.

## 12. இடர்களும், வாஸ்கோவின் இடுக்கண் அஞ்சாமையும்

புயல் தொடங்கியது. கப்பல்கள் நிலைகுலைந்து ஆடின. வானமே தீப்பிடித்ததுபோல் மின்னல் உண் டாயிற்று. மழை பொழிந்தது. அனைவரும் மீண்டும் வாஸ்கோவை யணுகினார்கள். திரும்பிச் சென்று தப்பலா மென்றனர். வாஸ்கோ மனக்கவலையையும் இரக்கத்தை யும் வெளிக்காட்டவில்லை. "அழியாப் புகழை அளிக்கக் கூடிய அலுவலில் முனைந்திருக்கின்றோம். அது முடியா

1. Scurvy.

மல் மீள்வதைவிட மாள்வதே மேல்,'' என்று துணிவுடன் கூறினர்.

தாம் மேற்கொண்ட அலுவலில் வெற்றியுற்றால் உண்டாகக்கூடிய நலங்களைப்பற்றி அவர் பேசத்தொடங்கினர். ஒரு மாலுமி ஓடிவந்து உணவுப் பொருள்கள் குறைந்துவிட்டபடியால் திரும்பியே ஆகவேண்டும் என்றான். "அன்றாடப் பங்கீட்டை இன்னும் குறைத்துக் கொள்ளலாம்; உணவில்லாமல் நடுக்கடலில் மரிக்கவேண்டி வந்தாலும் திரும்பிப்போக முடியாது,'' என்று கடுமையாக வாஸ்கோ சொல்லவே, அனைவரும் மனத்தாங்கல் உற்றனர். கடல் கொந்தளித்தது; கப்பல் அங்கும் இங்கும் வேகமாக ஆடியதால் மாலுமிகள் தலை தூக்கி நிற்கவும் மாட்டாமல் தவித்தனர். வாஸ்கோ அவர்களை அன்புடன் நோக்கினர். "நண்பர்களே! நமது புகழ் ஓங்கக் கடலும் நம்மைக்கண்டு கலங்குகின்றது. ஏன் அஞ்சுகின்றீர்கள்?'' என்று கேட்டார். நாகம் கேட்டு நடுங்கும் இடியொலியிலும் பேரொலியோடு பேசிய தங்கள் தலைவருடைய சொல்லைக் கேட்டனர், கருத்து இழந்த அம் மாலுமிகள். கடல் கலங்கினும் கலங்கா அவ்வுள்ளத்தின் உரத்தை வியந்தனர்; உயிரிழக்கினும் உறுதியிழக்க விரும்பாத அத் தலைவருடன் சிறப்பாகத் தங்கள் நாட்டிற்கும் பொதுவாக உலகிற்கும் தாங்கள் தொண்டு ஆற்றக் கிட்டியதை அவர்கள் தங்கள் பெறற்கரிய பெரும் பேறாகவே கருதினர். உண்மை யன்போடு நாட்டிற்குத் தொண்டு செய்யும் தோன்றல்களைத் தொடர்ந்த தொல்லைகளுக் காளாக்க விரும்பாதவன் போல, இருள்மேகக் கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு பகலவன் தன் ஒளிக்கரங்கொண்டு அவர்களுக்கு ஆறுதல்

அளித்தான். புயல் ஓய்ந்தது; மழை மறைந்தது. கலங்கள் கடலில் கவலையற்ற நிலைகண்டு சென்றன. அண்மையில் தரை புலனாயிற்று. மாலுமிகள் மனங் களித்து மீண்டும் உணர்வும் உற்சாகமும் வெற்றியில் நம்பிக்கையும் கொண்டனர். "அதுதான் நன்னம்பிக்கை முனை"[1] என்று வாஸ்கோ புன்முறுவலோடு தரையைச் சுட்டிக் காட்டினார். மாலுமிகள் தங்கள் கண்களை நம்ப முடியவில்லை; துயர்க்கடலினின்று தங்களுக்குக் கரை காட்டிய கடவுளை அனைவரும் மனமார வழுத்தினர். வாஸ்கோவுக்கு அங்கே இறங்குவதில் விருப்பம் இல்லை. இந்தியாவைக் காணும்வரை தமக்கு மனவமைதி ஏற் படாது என்பதை அவர் உணர்ந்தார். எனினும் தம் துணைவர் அனைவரும் மிகவும் களைத்திருந்தபடியாலும் அவ்விடத்தில் புதியதாகக் கிடைக்கக்கூடிய உணவுப் பொருள்களைக் கப்பலில் சேர்த்துக்கொண்டால் அது தமது பயணத்துக்கு உதவுமாதலாலும் கரையில் இறங்க இசைந்தார்.

## 13. நன்னம்பிக்கைமுனை காண்டல்

மெதுவாகக் கலங்கள் கரை சேர்ந்தன. தற்போது தென்னாப்பிரிக்கா என வழங்கும் அந்நாட்டு மக்கள் புதி தாக வந்த மக்களைக் கண்டு வியப்பும் மகிழ்வுங் கொண் டனர்; அவர்களுடைய அரசன் தனது படையுடன் வந்து அவர்களை வரவேற்றான். அவர்களுக்கு வேண்டிய உதவிகளையும் உணவுப் பொருள்களையும் கொடுத்தான். சில நாட் கழித்து அவர்கள் மீண்டும் தம் பயணத்தைத் தொடங்கினர். சில வாரங்கள் கழிந்தன. ஒரு நாள் வாஸ்கோ கலத்தின் மேற்றளத்தில் வந்து நின்றுகொண்

1. Cape of Good Hope.

ந்தார். தொலையில் மலைகள் மங்கலாகத் தோன்றின.
;தியா" என்று வாஸ்கோ மகிழ்வுடன் கூவினர்.

## 14. கள்ளிக்கோட்டை அடைதல்

தம் தாய் நாட்டை விட்டுப் புறப்பட்டுப் பதினொரு
கள்கள் கடற்பயணம் முடித்துக் [1]கள்ளிக்கோட்டைத்
றமுகத்தைக் களிப்புடன் கண்டார் வாஸ்கோ.
றவிலிருந்தும் [3]அரேபியாவிலிருந்தும் உள்நாட்டில்
ந்தும் அநேக வாணிபக் கலங்கள் அத்துறைமுகத்தில்
து தங்கியிருந்தன.

துறைமுகம் எங்கும் மணந்தரும் பொருள்களி
டைய நறுமணம் நாற்புறமும் வீசியது. ஒருபுறம்
வன் செப்பிடுவித்தைகள் செய்துகொண்டிருந்தான்.
ஒருபுறம் ஒருவன் கதை சொல்லிக்கொண்டிருந்
ர். பிறிதோரிடத்தில் ஒருவன் மக்களுக்குப் பேரின்ப
யைச் சொல்லிக்கொண்டிருந்தான் இன்னொரு
த்தில் ஆடைகள் விற்குங் கடைகளும், முத்துகள்,
ரிகள் விற்குங்கடைகளும் அமைந்திருந்தன. ஒவ்வோ
த்திலும் பொருள்களை வாங்குவதற்கும், வேடிக்கை
க்கவும் உள்நாட்டாரும், வெளி நாட்டாருமாக
நகர் நின்று கொண்டும், அங்கும் இங்கும் போய்க்
ண்டும் இருந்தனர். இவற்றை யெல்லாம் கண்ட
ஸ்கோவும் அவரது கூட்டத்தாரும் மிகவும் மகிழ்வும்
ப்பும் உற்றனர்.

இவற்றை யெல்லாம் கண்டு களித்த பின்னர் அவர்
அரசவை செல்ல விழைந்தனர். தம் நாட்டிற்கு
ல் நாட்டினர் பலர் புதிதாக வந்திருந்ததைக் கேட்ட

1. Calicut. 2. China. 3. Arabia.

அரசரும் தமது அவையிலிருந்த தலைமை அமைச்சர் வாயிலாக அவர்களுக்குச் செய்தி அனுப்பினார்.

## 15. கள்ளிக்கோட்டை அரசர்

வாஸ்கோ தமது துணைவரை அழைத்துக்கொண்டு அரசவை சென்றார். அரசர் அவ்வமயம் ஒரு பச்சை நிறமுள்ள பட்டு மெத்தையில் அமர்ந்திருந்தார். அவருடைய இருக்கையின் மேற்புறம் மெருகு இடப்பெற்று அவருடைய தலைக்கு மேலே ஒளி வீசிற்று. இடுப்பு வரை அரசர் ஆடை அணிந்திருந்தார். அதன் மேல்பாகத்தில் நிறைய அணிகள் மின்னின. இடத்தோளில் ஒரு வளையல் விளங்கிற்று. கழுத்தில் ஒரு முத்துமாலை அணிந்திருந்தார். ஒவ்வொரு முத்தும் ஒரு நெல்லிக்காய் அளவு இருந்தது. முத்துமாலைக்கு மேலே வைரங்களும் முத்துக்களும் பதிக்கப் பெற்ற தங்க நாண் ஒன்று விளங்கிற்று. அரசருடைய நீண்ட தலைமயிர், நுனியில் முடியப் பெற்று இரத்தினங்கள் அணிந்து ஒளியுடன் விளங்கிற்று.

## 16. அரசவை

அரசர் அருகில் தலைமைஅமைச்சன் அமர்ந்திருந்தான். அரசருக்கு அடப்பத்திலிருந்து வெற்றிலை பாக்கு மடித்துக் கொடுத்துக்கொண்டிருந்தான். அரசருடைய இருக்கையின் அருகில் அவருடைய எழுத்தாளர்கள் எழுத்தாணியும் பனையோலையும் கொண்டு அமர்ந்திருந்தனர்.

வாஸ்கோ அரசரை வணங்கித் தம் நாட்டினர் எவ்வாறு இந்தியாவுக்கு வழிகாண முயன்றனர் என்

பதையும், எவ்வளவு இடையூறுகளுக்குத் தாங்கள் ஆளாக நேர்ந்தது என்பதையும் பணிவாகவும் விவரமாகவும் எடுத்துச் சொன்னார்.

அரசர் அவர் கூறியதைக் கூர்ந்து கேட்டார். அவர்கள்மீது அன்புகொண்டார். அவர்களுக்குப் பொன்னும் மணியும் ஏலக்காய் இலவங்கம் சாதிக்காய் முதலிய நன்னாற்றக் காய்களும் வெகுமதியாகக் கொடுத்தார்.

## 17. வாணிபச் சிறப்புகள்

தாம் கொண்டுவந்த பவழம், தங்கம், வெள்ளி முதலியவற்றை வாஸ்கோ அரசருக்குக் காணிக்கையாகச் செலுத்தினார். அரசர் வாஸ்கோவின் விருப்பப்படி அவர்களுக்கு வேண்டிய நலங்களைச் செய்து தருவதாக வாக்களித்தார். மூன்று திங்கள் இந்தியாவில் தங்கி விட்டுப் பிறகு அரசரிடம் விடைபெற்று வாஸ்கோ தம் நாட்டிற்குத் திரும்பினார்.

## 18. தாய்நாட்டினர் கவலை

போர்ச்சுக்கல் நாட்டினர், வாஸ்கோ சென்று அப்போது ஓராண்டுக்கு மேலாகிவிட்டபடியால் அவரும் அவர் கூட்டத்தார் அனைவரும் எங்கேனும் இறந்திருப்பார்களென்று நினைத்தனர். கொதிக்கும் நீரிலும் நெருப்பு வீசும் இடங்களிலும் அவர் அகப்பட்டுக்கொண்டிருப்பார் என்று சிலர் பேசிக்கொண்டனர். [1]உலக நடுக்கோட்டை அடுத்துச் செல்லும்போது பகலவன் கொடுமை தாங்காமல் அவர்கள் மாண்டிருக்க வேண்டும் என்றும் வேறு சிலர் பேசிக்கொண்டனர். பின்னும்

1. Equator.

சில மாதங்கள் கழிந்தன. வாஸ்கோவையும் அவரது கூட்டத்தாரையும் மீண்டும் காண்பதென்ற எண்ணத்தைப் போர்ச்சுக்கல் நாட்டினர் அறவே கைவிட்டனர்.

## 19. தாய்நாடு திரும்புதல்

இரண்டாண்டுகள் கழிந்த பிறகு வாஸ்கோ மீண்டும் தம் நாட்டிற்குத் திரும்பினுர். மக்கள் அனைவரும் வியப்போடும் மகிழ்வோடும் கடற்கரை யடைந்தனர். வாஸ்கோவும் அவரோடு துணை சென்றவர்களில் வழியில் நோயால் இறந்தவர்கள் போக எஞ்சிநின்ற ஐம்பத்து ஐந்து பேரும் மகிழ்வோடு நாட்டை யடைந்தனர். இறந்தவர்களுடைய உறவினரும் மற்றையோரும் இறந்தவர்கள்மீது இரக்கம் கொண்டார்கள். எனினும் எஞ்சியவர்களையேனும் வெற்றியோடு மீளச்செய்த முதல்வனை மனமாரப் போற்றினர்.

## 20. வாஸ்கோவின் புகழ்

அனைவரும் வாஸ்கோவைப் புகழ்ந்தனர். அரசர் அவரைப் போர்ச்சுக்கல் நாடடினரால் இந்தியாவில் வாங்கப்பட்ட இடங்களை ஆளுவோராக நியமித்தார்.

போர்ச்சுக்கல் நாட்டுக் கவிஞர்களும் அவரைப் புகழ்ந்து கவிகள் இயற்றினர். கீழ் நாட்டையும் மேல் நாட்டையும் இணைக்க வழிகண்ட வாஸ்கோவை உலகத்தாரெல்லோரும் வாழ்த்தினர்.



# ௪. [1]பெர்டினண்டு மெஜெலென்

## 1. பதினைந்தாம் நூற்றாண்டு

உலக வரலாற்றில் பதினைந்தாம் நூற்றாண்டின் நிகழ்ச்சிகள் குறிப்பிடத்தக்கவை. நாடறியும் ஊக்கமும் அதுபற்றி ஓயாத முயற்சியும் அந்நூற்றாண்டில் நடைபெற்றன. அம்முயற்சியில் [2]ஸ்பெயின், [3]போர்ச்சுக்கல் என்னும் ஐரோப்பிய நாட்டினர் தலைசிறந்து விளங்கினர். கி. பி. 1493-ஆம் ஆண்டில் அந்நாட்டினர் உலகை இரு கூறாகப் பிரித்து ஒவ்வொரு நாட்டினரும் ஒவ்வொரு கூறிலும் உள்ள புத்தம் புதிய நாடுகளைக் காண்பதென்று முடிவுசெய்தார்கள். உலகப் படத்தில் [4]அஸோரெஸ் என்னுமிடத்திலிருந்து முந்நூறு கல் தொலை மேற்கில் தென்வடலாக ஒரு கோடிட்டு அக்கோட்டிற்குக் கிழக்கேயுள்ள பகுதியைப் போர்ச்சுக்கல் நாட்டினரும், மேற்கேயுள்ள பகுதியை ஸ்பெயின் நாட்டினரும், தேடிப் புது இடங்களைக் காண்பதென்று ஏற்படுத்திக் கொண்டார்கள். அந்த ஏற்பாட்டின்படி வாஸ்கோடகாமா கண்டுபிடித்த கீழ்த்திசை வாணிப வழியைப் பயன்படுத்த ஸ்பெயின் நாட்டினருக்கு உரிமையில்லை. ஸ்பெயின் நாட்டினர் மேற்றிசையில் [5]பெர்முடாஸ், [6]அமெரிக்கா முதலிய இடங்களைக் கண்டுபிடித்தனராயினும் மணந்தரும் பொருள்களும் செல்வமும் நிறைந்த கீழ்த்திசைத் தீவுகளுக்குப் போகும் வழி தங்களுக்கு இல்லை என்ற குறை அவர்களுக்கு உண்டாயிற்று.

---

1. Ferdinand Magellen. 2. Spain. 3. Portugal.
4. Azores. 5. Bermudez. 6. America.

பெர்டினண்டு மெஜெலென் என்பவர் போர்ச்சுக்கல் நாட்டினருடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தை ஸ்பெயின் நாட்டினர் மீறுமல் கிழ்த்திசைத் தீவுகளுக்குப் போய்ச்சேரும் வழியைக் காட்டிக் கொடுத்தார்.

## 2. மெஜெலென்

மெஜெலென் போர்ச்சுக்கல் நாட்டுக் கப்பற்றலைவர்களுள் ஒருவர். அவரும் அவருடைய நண்பரான [1]பிரான்சிஸ்கோ செர்ராஞே என்பவரும், [2]இந்தியப் பெருங்கடலில் போய்க்கொண்டிருக்கும்பொழுது மெஜெலென் அவரை அங்கேயே விட்டுவிட்டு [3]லிஸ்பன் துறைமுகத்துக்குத் திரும்பிவிட்டார்.

அவர் அங்கு வந்த சின்னுட்களில் அவருடைய நண்பரான பிரான்ஸிஸ்கோவிடமிருந்து அவருக்கு ஒரு கடிதம் வந்தது. ஒரு [4]நறுமணத் தீவைக் கண்டுபிடித்திருப்பதாகவும், அது வாஸ்கோட காமா கண்டுபிடித்த நாட்டைவிடப் பெரியதாகவும் செல்வம் நிறைந்ததாக இருப்பதாகவும், தம்மை அங்குள்ள அரசர் தம் [5]படைத்தலைவராக ஏற்படுத்தியிருந்தமையால் தாம் அங்கேயே தங்கியிருப்பதாகவும் பிரான்ஸிஸ்கோ அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

## 3. நறுமணத் தீவுகள்

நறுமணத் தீவுகளைப்பற்றிப் பற்பல விந்தைக் கதைகள் ஐரோப்பாவுக்கு எட்டி இருந்தன. எது எவ்வாறுயினும், அத்தீவுகளில் நறுமணப் பொருள்கள் ஏராளமாயிருந்தன வென்பது யாரும் மறுக்கொணு உண்மை.

1. Francisco Serano. 2. Indian Ocean.
3. Lisbon. 4. Spice Island. 5. Captain General.

மெஜெலெனுக்குத் தம் நண்பரைக் காணவேண்டு மென்று வேணவா உண்டாயிற்று. அவ்வேளை ஸ்பெயின் நாட்டினர் வாணிப வழிகாண ஆர்வங்கொண்டிருந்ததைத் தமக்கு ஏற்ற வாய்ப்பாகக் கொள்ள நினைத்தார். அவர் உடனே ஸ்பெயின் நாட்டை ஆண்ட [1]ஐந்தாம் சார்லஸ் அரசரிடம் சென்று தமக்கு ஒரு கப்பற்படை வேண்டுமென்றும், அவ்வாறு அதை அமைத்துக் கொடுத்தால் நறுமணத் தீவுகளை அவ்வரசர்க்கு உரிமையாக்கி விடுவதாகவும் கூறினார். [2]கொலம்பஸ் மாதிரியே தாமும் மேற்றிசை நோக்கியே செல்வதாகக் கூறினார். அமெரிக்காவுக்கு மேற்கே இருக்கும் பெருங்கடலுக்கும் அமெரிக்காவின் தரைப் பரப்புக்கு மிடையே ஒரு [3]நீர்ச்சேர்த்தி இருக்கவேண்டு மென்று அவர் உறுதியாக நம்பினார். அப் பெருங் கடலில் மேற்றிசையில்தான் நறுமணத் தீவுகளும் தம் நண்பரும் இருக்கவேண்டு மென்றும் அவர் நினைத்தார். சார்லஸ் அரசர் மெஜெலென் அப் புது வழியாக நறுமணத் தீவுக்குப் போகலா மென்றும், அதற்கு வேண்டிய துணைவர்களை மெஜெலென் சேர்த்துக்கொண்டால் புறப்படலா மென்றுங் கூறினார். அத்தகைய பயணத்திற் சேர யார்தான் முந்துவார்கள்? ஆண்மையாளர் அகப்படுவது அரிதன்றோ?

மெஜெலென் அஞ்சா நெஞ்சினர்; வீரஞ்செறிந்தவர். அவரது ஆண்மையை அனைவரும் அறிந்திருந்தனர். தம் உயிரைப் பொருட்படுத்தாது ஒரு சமயம் ஒரு கப்பற் கூட்டத்தையே அவர் உயிர்காத்த வரலாறு அக் கால மக்களுக்குத் தெரியும்.

---

1. Charles V. 2. Columbus. 3. Strait.

## 4. புறப்பாடு

நாளடைவில் ஒரு வகைப்படாத பலதரத்தவரான முந்நூற்றுவர் அவருடன் கடற் பயணம் போகச் சேர்ந்தனர். அவர்களிடம் ஐந்து கப்பல்கள் இருந்தன. அவையும் பழுதுபட்டவை. ஒரு வாரம் கடலில் போனுல் அவை உடைந்துவிடும் என்று கூடச் சிலர் சொல்லிக் கொண்டார்களாம். ஆனுல் மெஜெலென் அச்சொல்லைப் பொருட்படுத்தாமல் தம் கருமமே கண்ணுயிருந்தார். வெற்றியைத் தமது இலக்காகக் கொண்டு [1]விக்டோரியா என்ற கப்பலில் புறப்பட்டார் மெஜெலென்.

## 5. ப்ரேஸில்

ஐரோப்பாவின் தென்மேற்குக் கோடியிலிருந்து தென் அமெரிக்காவின் வடகிழக்கு முனைக்குப் பல்லாயிரக் கணக்கான கல்கள் கடலிற் செல்லவேண்டும். பத்துவாரகாலம் மெஜெலெனும் அவருடைய துணைவரும் கடலிற் பயணஞ் செய்து 1519-ஆம் ஆண்டு நவம்பர் 23-ஆம் நாள் அவர்கள் கரைகண்டார்கள். [2]ஸெயிண்டு அகஸ்டின் முனையில் இறங்கினுர்கள்.

அவர்கள் வந்து இறங்கிய புதிய நாட்டுக்கும் அவர்களுடைய தாய் நாட்டுக்கும் எத்துணை வேற்றுமை !

ஸ்பெயின் நாட்டில் கோட்டைகளும், அரண்மனைகளும் இருந்தன. வேளாண்மை நிறைய நடந்தது. மக்கள் நாகரிகமுற்றுச் சிறந்து விளங்கினர். அவர்கள் வந்திறங்கிய புதுநாடாகிய [3]ப்ரேஸிலில் நாகரிகமற்ற மக்களைக் கண்டனர். அம் மக்கள் தங்கள் உடம்புகளில் சாயந் தீட்டிக்கொண்டு இருந்தார்கள். அவர்களுடைய ஆடைகள் மிகச் சொற்பம். அவை கிளிகளின் சிறகு

1. Victoria. 2. Cape of St. Augustine. 3. Brazil.

களினால் செய்யப்பட்டவை. வயல்களில் மகளிரே வேலை செய்து வந்தனர். அவர்கள் தங்கள் குழந்தைகளைத் துணியாற் கட்டித் தங்கள் கழுத்தில் தொங்கவிட்டுக் கொண்டே வேலை செய்தனர்.

நாகரிகத்திற் குறைந்தவராயினும் ப்ரேஸில் இந்தியர், அன்பு நிறைந்த மனத்தினர். அவர்கள் அங்கு வந்தவர்களைத் தங்கள் விருந்தினராகக் கருதினர். கிளிகளையும், மஞ்சள் நிறக் குரங்குகளையும் அவர்களுக்கு நன்கொடையாகக் கொடுத்து அவர்கள் இருப்பதற்கு மரத்தினால் நீண்டதொரு வீடும் கட்டிக்கொடுத்தார்கள். அவர்களுடைய விருந்தோம்புதலை மெஜெலென் மிகவும் பாராட்டினார். ஆயினும் அங்கு இரண்டு வாரங்கள் தான் தங்க முடிந்தது. அவர்கள் புறப்பட்ட வேலை நிறைவேற வேண்டுமன்றோ ! ஆதலால் தங்கள் கப்பல்களைத் தெற்கு நோக்கிச் செலுத்திக்கொண்டு அவர்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள்.

தெற்கே செல்லச்செல்ல குளிர் மிகுதியாயிற்று. ஒரு சமயம் அடித்த சுழற் காற்றில் கப்பல் நொறுங்கிக் கவிழ்ந்துவிடும் போலிருந்தது. மெஜெலெனுடன் கூட வந்தவர்கள் ஸ்பெயினுக்குத் திரும்பி விடவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். ஆனால் மெஜெலென் அவர்களுக்கு ஊக்க மூட்டித் தாங்கள் மேற்கொண்ட கருமத்தை முடித்தே திரும்பவேண்டுமென்று கூறினார்.

## 6. பெடகோனியா

தென் அமெரிக்காவில் [1]பெடகோனியா என்னும் நாட்டின் கரையில் அவர்கள் தங்கினார்கள். அந் நாட்டினர் மிகவும் உயரமானவர்கள். அவர்களுடைய கால்

1. Patagonia.

அடிகள் பெரியவை. அவர்களுடைய கால் அடிகள் பெரியனவா யிருந்தமையால் அவர்களுக்குப் "பெருங் காலடியர்"[1] (பெடகோன்கள்) எனப் பெயர். அதனால்தான் அவர்கள் நாட்டுக்கும் அப் பெயர் ஏற்பட்டது. அவர்கள் நீண்டு பருத்த உருவத்துடன் இருந்தாலும், முகமுழுதும் சிவப்புப் பூசிக்கொண்டிருந்தார்கள். கண்ணிமைகளில் மஞ்சள் நிறந் தீட்டியிருந்தார்கள். இரு கன்னங்களிலும் இதய உருவம் வரைந்திருந்தார்கள். தலையிருக்கு வெள்ளை பூசியிருந்தார்கள். மெஜெலென் கூட்டத்தார் முகம் பார்க்கும் கண்ணாடி யொன்றை ஒரு பெருங் காலடியனுக்குக் காட்டினார்கள். அக் கண்ணாடியில் அவன் தன் உருவைக் கண்டதும் துள்ளிக் குதித்தான். தன் உருவைக் கண்டு தானே அஞ்சி வெறுத்தான். அவனுடைய மனதை அமைதிப்படுத்த மெஜெலென் அவனுக்குக் கண்ணாடி, சீப்பு முதலியன நன்கொடை கொடுத்தார்.

## 7. மெஜெலென் நீர்ச்சேர்த்தி

கடல் கொந்தளிப்பு அடங்கும் வரையில் அங்கேயே தங்கித் தங்கள் பயணத்தை மறுபடியும் தொடங்கினார்கள். அங்குத்தான் தாங்கள் நெடுநாளாகத் தேடிய நீர்ச்சேர்த்தியைக் கண்டார்கள். அந் நீர்ச்சேர்த்திக்கு [2]மெஜெலென் நீர்ச்சேர்த்தி என்று இப்போது பெயர் வழங்குகின்றது. அந் நீர்ச்சேர்த்தியின் மேற்குப் புறம் போகும் வழியில் இருந்த தீவுகள், குடாக்கள், மலைகள் முதலியவற்றிற் கெல்லாம் மெஜெலென் பெயர் கொடுத்துக் கொண்டே போனார்.

1. Patagons (Big feeters.)
2. Magellan Strait

## 8. பசிபிக் பெருங்கடல்

அந் நீர்ச்சேர்த்தியைத் தாண்டி ஒரு பெருங்கடலுக்குள் கலம் சென்றது. அப்போது கடுங்காற்று அடங்கிற்று. நீர் கொந்தளிக்கவில்லை. "இது ஒரு [1]அமைதியான கடல்" என்று களிப்புடன் கூறினார் மெஜெலென். அதுவே பசிபிக்கடல் என்றாயிற்று.

## 9. உணவு குன்றல்

கடற் கொந்தளிப்பு அடங்கினும் மக்கள் கொந்தளிப்பு அடங்கவில்லை. மெஜெலென் துணைவர் அவரையணுகித் தங்கள் உணவுப் பொருள்கள் கடுகக் குன்றிப் போகின்றன வென்றனர். அழுத கண்ணும் சுருங்கிய முகமும் கொண்டனர் அவர்கள். "உணவு குன்றினால் கப்பல் கட்டியிருக்கும் தோல்களைத் தின்றுகொண்டாவது மேல் நோக்கிச் செல்வோமே யொழியப் பின்வாங்க மாட்டோம்," என்று மெஜெலென் கூறிவிட்டார். நாளடைவில் உணவின்றிப் பலர் மடிந்தனர். உணவுப் பொருள்கள் எல்லாம் செலவானவுடன் மெஜெலென் முற் கூறியபடியே கப்பல் தோல்களை வேகவைத்துத் தின்றனர். எஞ்சியவர்கள் தோல்களும் அற்றுப்போக மரத்தூளை உணவாகக் கொண்டனர். என்னே வியப்பு! 'மெய் வருத்தம் பாரார் பசி நோக்கார்,' என்ற ஆன்றோர் வாக்குக்கு இலக்காயினர் அன்றோ மெஜெலென் கூட்டத்தார்!

## 10. திருடர் தீவுகள்

ஒரு நாட் காலை பசியால் அலைந்துவரும் அவர்கள் ஒரு தீவின் அருகே வந்தார்கள். அங்கே மக்கள் ஓசை

1. Pacific Ocean.

கேட்டு மகிழ்ந்தார்கள். அத் தீவு மக்கள் வாழைக்குலைகள், தேங்காய்கள் முதலியன கொண்டுவந்திருந்தார்கள். கப்பலோட்டிகள் அவற்றைப்பெற்று உண்டார்கள். அத் தீவுகளில் மலைகள், மூங்கில்கள், தென்னைகள் நிறைந்திருந்தன. அவற்றின் அழகை அவர்கள் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களுடைய சிறு படகைத் தீவுக்காரர்கள் திருடிக்கொண்டு போய்விட்டார்கள். அதனால் அத் தீவுகளைத் [1]திருடர் தீவுகள் என்று அழைத்தனர். அக் கடலில் தான் நறுமணத்தீவும் இருக்க வேண்டுமென்று மெஜெலென் எண்ணினார். அதையடைந்து தம் நண்பரான பிரான்ஸிஸ் கோவை விரைவில் காணப் பெரிதும் விரும்பினார்.

## 11. பிலிப்பைன் தீவுகள்

பின்னும் ஒருவாரம் பயணஞ் செய்து தீவுகள் கூட்டம் ஒன்றை மெஜெலென் அடைந்தார். அதுதான் நறுமணத் தீவு என அவர் வீண்களிப் படைந்தார். ஆனால் அவை [2]பிலிப்பைன் தீவுகள். நன்னீர் ஊற்றுக்களும், தென்னைமரங்களும் அத்தீவுகளில் நிறைந்திருந்தன. அங்குத் தங்கித் தம் கூட்டத்தாருள் நோயுற்றவர்களை நலப்படுத்தத் தொடங்கினார். ஒரு நாள் அளவும் அந்நாட்டு மக்கள் முகம் தென்படவே இல்லை. மறுநாள் தீவுக்காரர்கள் ஒன்பது பேர்கள் அடங்கிய படகு ஒன்று இவர்களை நோக்கி வந்தது. அந் நாட்டுத் தலைவன் படகிலிருந்து இறங்கி வந்து மகிழ்முகத்துடன் மெஜெலெனையும் அவருடைய கூட்டத்தாரையும் வரவேற்றான். அவர்களுக்குச் சிவப்புக் குல்லாய்கள், முகம் பார்க்கும் கண்ணாடிகள், சலங்கைகள் முதலியவற்றைக் கொடுத்தார்

1. Ladrones. 2. Philippines

கள் மெஜெலென் கூட்டத்தார். தீவுக்காரர்கள் மீன், பழம், தேங்காய் முதலிய உணவுப் பொருள்களை ஐரோப்பியருக்குக் கொடுத்து அவர்களுடைய பசிப்பிணியைப் போக்கினார்கள்.

## 12. உணவு

நண்பர்களானபின் மெஜெலென் கூட்டத்தாரை விருந்துக்கு அழைத்தனர் தீவுக்காரர்கள். எதிர்பாரா விருந்தினர் ஆதலால் சிறப்பான விருந்து ஒன்றும் ஆயத்தஞ் செய்ய இயலவில்லை என்று தீவுத் தலைவனான அரசன் கூறினான். விருந்தில் முதன் முதல் வறுத்த பன்றிக்கறி, பின்னர் சோறு, கறி, மணமிட்ட குழம்பு, தேங்காய்ப் பாலும் பதநீரும் கலந்த குடி முதலியனவும் பரிமாறினார்கள். அடுத்தபடியாக இஞ்சியிட்டு வறுத்த மீன். இவ்வளவும் அவர்களால் உண்ண முடியவில்லை. ஆயினும் துணிவுடன் அனைத்தையும் உட்கொண்டனர். தங்களுக்கு ஆறு திங்கள் அளவும் உணவேவேண்டுவதில்லை என அவர்கள் எண்ணமிட்டுக்கொண்டிருக்கையில் சுமைபோல மீனும் சோறும் கொடுத்தார்கள். அதையும் மறுக்க மனமின்றி உட்கொண்டார்கள். உண்ட அலுப்பால் அயர்ந்து உறங்கிப் பேருண்டியால் விளைந்த களையை மறந்தனர்.

## 13. அரசன்

அரசனைக் காண மெஜெலெனுக்கு மிக்க புதுமையாயிருந்தது. அரசனை ஒரு முரடன் என்று அவர் நினைத்தார். "உடல் முழுதும் சாயம் தீட்டி மிகக் குறைந்த உடையுடன் பழுப்பு நிறத்தனாய்க் காணப்பட்டான் அவன். காதில் பொன் வளையங்களும் பற்களில் பொற்

குமிழ்களும் அணிந்திருந்தான். குள்ளமாகப் பருத்த உருவம். ஒழிவையும் அமைதியையும் பெரிதும் விரும்பு பவன். நெறியும் நேர்மையுமுடையவன் ; ஆயினும் செருக்கும் படைத்தவன். அவனுடன் எவரும் நேரிற் பேசலாகாது. ஒரு குழாய் வழிதான் பேசவியலும். அவனுடைய பழக்கங்கள் விந்தை மிகுந்தவை. ஒருவரிடம் தனக்குள்ள அன்பை அவன் காட்ட வருவது கைவிரல்களை மடக்கிக் குத்த வருவதுபோலிருக்கும். அரசனது செல்வச் சிறப்பை அவனிடமிருந்த பொற் பாண்டங்கள், அணிகலன்கள் நன்கு விளக்கின.''

அரசனைப்பற்றி மெஜெலென் எவ்வாறு புதுமையாய் நினைத்தாரோ அவ்வாறே அவ்வரசனும் மெஜெலென் கூட்டத்தாரைப்பற்றி நினைத்திருக்கக் கூடுமன்றோ! "ஸ்பெயின் நாட்டினர் எவ்வளவு வேடிக்கையானவர்கள்! காய்ந்து வற்றிப்போனவர்கள்! தோல் போர்த்த எலும்புக் கூடுகள். தங்கள் உயிருக்குந் துணிந்து அவர்கள் ஏன் இங்கு வந்தார்கள்? அவர்கள் தாய்நாடு நலமிகுந்த தில்லையோ! நம்முடைய பொன்னைக்கண்டு அவர்கள் மலைத்துப் போனார்கள் அன்றோ! அதை அவர்கள் போற்றுவார்கள் போலும். அவர்கள் முகத்தில் வேலைப் பாடு ஒன்றும் இல்லையே! தங்கள் உடல்தோலை அழகு படுத்தச் சித்திரங்கள் தீட்டாமல் விலங்குகளைப் போல வைத்திருக்கின்றார்களே! காற்றும், வெயிலும் படாமல் தங்கள் உடல் முழுவதும் கந்தைகளால் மூடிக்கொள்ளு கின்றார்களே! அவர்களுடைய பழக்கங்கள் எத்துணை வேடிக்கையானவை! ஒருவர்க்கொருவர் அன்பைக் காட்ட ஒருவர் மற்றொருவருடைய உள்ளங்கையைப் பற்றிப் பிசைந்துவிடுகிறார்களே!''

தற்போது [1]மொலுகஸ் என வழங்கும் நறுமணத் தீவுகளையும் அங்குள்ள தம் நண்பரையும் காணவேண்டும் என்ற விருப்பம் மெஜெலெனுடைய அமைதியை அழித்தது. அவர் துடிதுடித்தார்.

காலம் கடிது சென்றது! காலத்தின் கோலம்தான் என்னே! மெஜெலென் ஸ்பெயினை விட்டுப் புறப்பட்ட மூன்று ஆண்டுகட்குப்பின் தள்ளாடித் தடுமாறிக் கொண்டு, கப்பல் ஒன்று ஸ்பெயின் துறைக்கு வந்து நின்றது. அதுதான் மெஜெலென் சென்ற [2]விக்டோரியா கப்பல் என்று எவரும் ஏற்க இயலவில்லை. அது அவ்வளவு நிலையழிந்து இருந்தது. அக் கப்பலின் தளத்திலிருந்து ஒரு சிலரே கரையை ஆவலுடன் நோக்கிக் கொண்டு நின்றனர்.

## 14. ஊர் திரும்பியவர்கள்

கரையில் இருந்த மக்கள் "அது மெஜெலென் கப்பலாகத்தான் இருக்கும்" என்று சொல்லி, "மற்றையோர் எங்கே?" என்று கப்பலில் இருந்தவர்களைக் கேட்டார்கள்.

"மாலுமிகளுள் ஒருவன் முன்வந்து, "எங்கள் தலைவர் மாண்டுபோனார்—பிலிப்பைன் தீவுகளில் அடக்கமானார்," என்றான்! அந்தோ! நறுமணத்தீவுகளைக் காணப் பெரிதும் விழைந்த வீரனின் கதிதான் என்னே! "ஊக்கமும், மகிழ்வும் மிகுந்து ஸ்பெயினை விட்டுப் புறப்பட்ட இருநூற்று எண்பதின்மருள் பதினெண் பேர்களும், ஐந்து கப்பல்களுள் ஒன்றோடு திரும்பினோம்," என்று கூறினான்.

---

1. Moluccas. 2. Victoria.

இறந்தவர்களுக்காக வருத்தமும், திரும்பியவர்களுக்குக் களிப்பும் கொண்ட மக்கள் கப்பலை நோக்கிச் சென்றனர். அப்போது மாலுமிகள் "மெஜெலென் இறந்தாராயினும் அவர் இலக்காகக் கொண்ட நறுமணத் தீவுகளை நாங்கள் கண்டுபிடித்தோம்," எனப் பெருமையுடன் கூறினார்கள்.

## 15. அவர்கள் வரலாறு—மேஜெலேன் இறந்தது

"எங்கள் தலைவரைப் பறிகொடுத்த குறையும் ஏக்கமும் வாட்ட நாங்கள் பிலிப்பைன் தீவுகளை விட்டகன்று கடலில் பயணஞ் செய்தோம். ஒரு தீவுக் கூட்டத்தைக் கண்டு [1]மிண்டாேனா என்னுமிடத்தில் முதலில் இறங்கினோம். அரசனே எங்களுக்கு விருந்தளித்தான். தீவர்த்திகளின் ஒளியில் நாங்கள் சோறும் மீனும் உண்டு பதநீர் பருகினோம். தம்முடைய என்றுமழியாத நட்பைச் சூள் உரைக்க அரசன் தம் கையிலிருந்து இரத்தம் எடுத்து முகத்திலும், நாவின் நுனியிலும் தடவிக்கொண்டான். யாங்களும் அவ்வாறே செய்தோம். எவ்வளவு விந்தையான பழக்கம்! தென்னோலைகளும், கோரைப் பாய்களும் எங்கள் படுக்கைகள். இஞ்சி விளைவுதான் அங்கு அதிகம். பள்ளத்தாக்குகளில் பொற்கனிகள் ஏராளமாயிருக்கின்றன. ஆனால், அந்நாட்டினர் பொன்னைப் பொருட்படுத்துவதே இல்லை.

## 16. நறுமணத் தீவுகள்

"அங்கே [2]பாலாவன் என்றொரு தீவு உண்டு. அதில் மிக இனிய பொழுது போக்கினோம். யானைகளின் மேல் ஊர்வலம் போனோம். வெற்றிலை பாக்குப் போட்

1. Mindano. 2. Palawan.

டுக்கொண்டோம். நாங்கள் ஊர்வலம் போனபொழுது எங்களைப் பெருமைப்படுத்தத் தெருக்களில் விலை உயர்ந்த உடைகள் அணிந்த காவலாளிகள் நின்ருர்கள். ஏலம், இலவங்கம் நிறைந்த சிற்றுண்டிகளை அரசர் அனுப்பிஞர். ஏழு ஆட்கள் அவருடைய நன்கொடைகளை எங்களிடம் எடுத்து வந்தார்கள். அவருடைய இருப்பிடம் அழகான ஓர் அரண்மனை. அதன் ஒவ்வோர் அறையும் பொன்னுலும் பட்டாலும் அலங்கரிக்கப் பெற்றிருந்தது. நாங்கள் அரசரிடம் நேரே பேச இயலவில்லை. நாங்கள் அரண்மனைக்குச் சென்றபோது அங்கொரு பணியாளர் எங்களை வரவேற்ருர். நாங்கள் அரசர்க்குச் சொல்ல வேண்டியதை அவரிடம் சொன்னேம். அவர் தம் தலைவருக்கு அச் செய்தியை அனுப்பிஞர். அவர் அதை அரசகுடும்பத்தினர் ஒருவர்க்குத் தெரிவித்தார். அவரும் அரசர்க்கு நேரே சொல்லவில்லை. அரசர் பக்கலில் இருந்த ஒருவர்க்கு ஒரு குழாய் மூலமே எங்கள் செய்தியைச் சொன்ஞர். அதன் பின்னர் நடந்த தொன்றும் நாங்கள் அறியோம்.

## 17. நறுமணப் பொருள்கள்

"நறுமணப் பொருள்கள் விளைவதை நாங்கள் பார்த்தோம். [1]டெர்நேட் என்னுமிடத்தில் நாங்கள் ஒரு இலவங்க மரத்தைச் சோதித்தோம். அதன் பட்டை கறுத்தும் மணமிகுந்தும் இருந்தது. இலவங்கம் கிளைகளின் நுனியில், சிவந்த பூக்களிடையில் கொத்துக் கொத்தாய்க் காய்க்கிறது. நாங்கள் பார்த்த தீவுகளில் மிகப் பெரிதான [2]போர்னியோவில் கற்பூர மரங்களையும் சாதிக்காய் மரங்களையும் பார்த்தோம்.

1. Ternete. 2. Borneo.

"அத் தீவுகளில் [1]பிரான்ஸிஸ்கோவைப் பற்றிக் கேட்டோம். அவரும், மெஜெலென் இறந்தகாலத்திலேயே இறந்துபோனதாக அறிந்தோம்."

## 18. உலகு சுற்றி வந்தவர்கள்

இவ்வகையாக விக்டோரியா கப்பலானது வாஸ்கோடகாமா சென்ற வழியாகவே நன்னம்பிக்கை முனை சுற்றி ஆப்பிரிக்காவின் மேற்குக்கரை யோரமாக ஸ்பெயினுக்கு நேராகச் சென்றது. ஸ்பெயின் திரும்பிய பதினெண்மரும் உலகை வட்டமாகச் சுற்றியவர்கள்.

## 19. உலகின் வடிவம்

மெஜெலென் கூட்டத்தினர் உலகை வட்டமாகச் சுற்றியதால் உலகின் உருவம் வட்டம் என்று மக்களுக்குப் புலனாயிற்று. உலகம் தட்டையானது என்று அதுவரையில் அவர்கள் கொண்டிருந்த கொள்கை மறைந்தது.

## 20. மெஜெலென் புகழ்

மெஜெலென் பெயர் என்றும் அழியாதது. அவர் பெயரால் ஒரு நீர்ச்சேர்த்தி இருப்பதுடன் அங்கே வானகத்தில் முகில்கள் போன்றுள்ள இரு உடுக் கூட்டங்களுக்கு [2]"மெஜெலென் முகில்கள்" என்ற பெயரும் வழங்குகின்றது.

---

1. Francisco. 2. Magellanic Clouds.

# ரு. [1]ஜேம்ஸ் குக்

## 1. தென்கடற் கண்டம்

[2]"பசிபிக் பெருங்கடலில் தென் கடற் கண்டம் ஏதாவது உண்டோ?" என்பதை ஆராய, பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் [3]டச்சுக்காரர்கள் பெரிதும் பாடுபட்டனர். கி. பி. 1642-ஆம் ஆண்டில் நாவிகர் [4]டாஸ்மன் என்பவர் தற்போது [5]நியூஸிலாந்து என வழங்கும் நிலப்பகுதியில் இறங்கினார். அதைக்கடந்து அவர் போகும்போது அஃது ஒரு பெரு நிலப்பரப்பின் பகுதியாயிருக்கவேண்டுமென்று நினைத்தார். அவர் நினைத்தது மெய்யா பொய்யா வென்பது ஒரு நூற்றாண்டுக்குப் பின் நாவிகர் [6]குக் என்னும் ஆங்கிலேயரால் காணப்பட்டது.

## 2. வெள்ளிக்கோளின் வானப்போக்கு

இங்கிலாந்தில் [7]ராயல் கழகம் என்று அரசர் பரிவு பெற்ற நிலையம் ஒன்று உள்ளது. கி. பி. 1768-இல் அவர்களுக்கு ஒரு பெரும் கலக்கம் உண்டாயிற்று. அவர்கள் வானநூற் கணக்கீட்டின்படி கி. பி. 1769-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 3-ஆம் நாள் [8]வெள்ளிக்கோள் [9]தரைக்கும் [10]கதிரவனுக்கும் இடையில் வானத்திற் செல்லும் என்று அறிந்தார்கள். அஃது ஒரு வியப்புறும் நிகழ்ச்சியாயினும் மிகக் குறிப்பிடத்தக்க காட்சியாகும். வானநூல், தரைநூல் ஆராய்வார்க்கு அந் நிகழ்ச்சி மிக

---

1. James Cook. 2. Pacific Ocean. 3. The Dutch.
4. Tasman. 5. New Zealand. 6. Cook.
7. Royal Society. 8. Venus. 9. Earth.
10. Sun.

மிக முதன்மையானதாம். வெள்ளிக்கோள் கதிரவனுடைய உருவைத் தாண்டிச் செல்ல ஆகும் நேரத்தைக் கணக்கெடுத்துவிட்டால், அக் கணக்கிலிருந்து பல உண்மைகளையும் கணக்குகளையும் அறிய இயலும். நமக்கும் கதிரவனுக்கும் இடையில் உள்ள தொலை என்ன என்று கணக்கிடலாம். இன்னும் பலவும் அறியலாம் என்று ராயல் கழகத்தினர் கருதினர்.

அவ் வரிய வான் நிகழ்ச்சியை இங்கிலாந்திலிருந்து காண இயலாது. நாவிகர் [1]மெஜெலென் சென்ற வழியில் தென் பசிபிக் கடலில்தான் அது தெரியும். அவ்விடத்திற்குப் போய்ப் பார்க்கவேண்டும். தென் பசிபிக் கடலில் யாரும் பயணம் போனதில்லை. அக் கடலில் பயணஞ் செய்ய இயலுமோ வென்பதும் ஐயத்திற்கிடமானது ; கண்டறியப் படாதது.

## 3. அரசினர்க்கு விண்ணப்பம்

எவ்விதமாயினும் அங்கு யாரேனும் போய்த் தீர வேண்டும் என்று முடிவு கட்டிய ராயல் கழகத்தார் இங்கிலாந்து அரசினருக்குத் "தாங்கள் யாரையாவது அவ்விடத்துக்கு அனுப்பி அந் நிகழ்ச்சியைக் கண்டு குறிப்புகள் கொண்டுவரச் செய்வது இன்றியமையாததாகும்; ஏனெனில் பின்னொரு நூற்றாண்டளவும் அத்தகைய அரிய நிகழ்ச்சி ஏற்படாது," என்று விண்ணப்பித்துக் கொண்டனர்.

## 4. ஜேம்ஸ் குக்

தென்பசிபிக் கடலுக்கு யார் போவது? அங்குப் போவார்க்குக் கப்பற்றொழில் பயிற்சியும் வானநூல்

---

1. Magellen.

அறிவும் வேண்டுவன வன்றோ! வான நிகழ்ச்சிகளை உற்று நோக்கிக் குறித்துக் கணக்கிட வல்லராயும் இருத்தல்வேண்டு மன்றோ!

இத்தகைய நலங்கள் வாய்ந்தவர், அரசர் கடற் படையிலிருந்த ஜேம்ஸ் குக் என்பார் என அரசினர் தேர்ந்தெடுத்தனர். அவர் யார்? அவருடைய வரலா றென்ன?

## 5. இளமை

ஜேம்ஸ் குக் கி. பி. 1728-ஆம் ஆண்டில் [1]யார்க் ஷையரில் பிறந்தார். அவருடைய தந்தை வயல்களிற் கூலி வேலைசெய்தார். ஆதலின் குக் தம் பிள்ளைப் பருவத்தி லேயே ஊதியந் தேட நேரிட்டது. அவரது இளமை மிகவும் வருத்தம் நிறைந்ததே.

## 6. ஆர்வம்

அவர் கடலில் வருங் கலங்களைக் காணுந்தோறும் மனம் அலைவுறுவார். கப்பற்காரர்கள் பற்பல புதுப் புது நாடுகளைப்பற்றிய விந்தை மிக்க வரலாறுகளைச் சொல்லும்பொழுது ஜேம்ஸ் குக் தாமும் அத்தகைய புதிய இடங்களைக் காணவேண்டு மென்று மனந் துடிக்கக் கேட்பார். ஆனால் ஒரு கடைக்காரரிடம் வேலை ஒப்பந்தத்தில் அவர் அமர்ந்து இருந்தபடியால் அவர் அவ்வேலையை விட்டு விலகித் தம் மன மிசைந்த கப்பல் வேலைக்குச் செல்ல இயலவில்லை.

## 7. கப்பலில் சேர்தல்

ஒருநாள் வேண்டுமென்றே தம் முதலாளியுடன் சண்டையிட்டார். அதனால் அவரை அம் முதலாளி

1. Yorkshire.

வேலையைவிட்டு நீக்கினான். விடுதலை யடைந்த களிப் பினால் பையன் துள்ளிக் குதித்துச் சென்றான். பின் னர் ஏழாண்டுகள் அளவும் ஒரு நிலக்கரிக் கழகத்தாரிடம் படகுகளில் வேலை செய்தார். அவருடைய திறமை நன்கு புலனாகவே அரசினருடைய கடற்படையிற் சேர்ந்து [1]மெர்குரி என்ற கப்பலில் அலுவல் பெற்றார். அவர் ஆண்மையும் திறமையும் மிக்கவர் என அரசினர் அறிந்திருந்தனர் செயற்கரிய செய்தவர் எனவும் இடுக் கண் அஞ்சாதவர் எனவும் அறிந்திருந்தனர். [2]ஸெயிண்ட் லாரென்ஸ் ஆற்றையும், [3]நியூபவுண்டுலாந்து நாட்டையும் தவறின்றிக் கணக்கெடுத்திருந்தார். அக் கணக்குகளின் படி அவர் வரைந்திருந்த படங்கள் அக்காலத்திலிருந்த மற்றெல்லாப் படங்களையும் விட மிகவும் சரியானவை யாகவும் கணக்குத் தவறாதனவாகவும் இருந்தன. இதற் குக் காரணம் குக் தம் நேரத்தை [4]வானநூலும், [5]நிலக் கணக்கும் கற்பதிற் செலவழித்ததுதான். நில அளவு களை எடுப்பதைப்பற்றி அரைகுறையான சில கருத் துக்கள் தெரிந்திருந்தால் மட்டும் போதாதென்றும், அக் கலையைக் கசடறக் கற்று உணரவேண்டுமென்றும் அவர் விரும்பினார்.

## 8. பொறுப்பும் தகுதியும் உள்ள தலைவர்

இவ்வாற்றால் ஜேம்ஸ் குக்தான் வெள்ளியின் நடப் பைக் கணக்கிடவேண்டிய பயணத்துக்கு ஏற்ற பொறுப் புள்ள தலைவர் எனத் துணிந்தனர்.

---

1. Mercury. 2. The St. Lawrence.
3. Newfoundland. 4. Astronomy.
5. Geometry.

## 9. எண்டவர்

கி. பி. 1768-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களில் ("முயற்சி" என்னும் பொருள் உள்ள) [1]எண்டவர்" என்ற பெயர் கொண்ட கப்பல் ஜேம்ஸ் குக்கின் தலைமையில் இங்கிலாந்திலிருந்து புறப்பட்டது. அக் கப்பலில் எண் பது மக்களுக்குமேல் இருந்தனர். அவர்களுள் [2]அறிவியல் நிபுணரான [3]பேங்ஸ் என்பவரும், [4]மரநூல் வல்லவரான [5]டாக்டர் சோலாண்டர் என்பவரும் சென்றனர்.

## 10. பயணத்தின் நோக்கங்கள்

வெள்ளியின் போக்கை நோக்குவது மட்டுமின்றி ஆங்குள்ள நிலவெளிகளையும் கண்டறிய வேண்டுமென் பதும் குக்கின் பணிகளுள் ஒன்று. தரைநூல் வல்லார் "தென்கடல்களில் ஒரு கண்டம் இருந்தே தீரவேண்டும். [6]டாலமியின் படங்கள் அந்த இடத்தில் ஒரு பெரு நிலப்பரப்பு இருக்கவேண்டுமென்று காட்டுகின்றன. மெஜெலென் என்பவரும் அமெரிக்காவின் ஓரத்தில் ஒரு நீர்ச்சேர்த்தியைக் கடந்து சென்றிருக்கின்றார். அந் நீர்ச் சேர்த்திக்குத் தெற்கே ஒரு பெருநிலப்பரப்பு இருக் குமோ?" என்று எண்ணினர்.

## 11. பயணம்

கி. பி. 1768-ஆம் ஆண்டு ஆகஸ்டு 26-ஆம் நாள் [7]பிளிமத்தை விட்டுப் புறப்பட்ட எண்டவர் நவம்பர் 13-ஆம் நாள் [8]தென் அமெரிக்காவில் உள்ள [9]ரையோடிஜெனேய்ரோ

1. Endeavour. 2. Scientist. 3. Banks.
4. Botany. 5. Dr. Solander. 6. Ptolemy.
7. Plymouth. 8. South America.
9. Rio - de - Janeiro.

என்ற துறையில் தங்கியது. அக் கப்பலின் வருகை ஆங்கிருந்த போர்த்துகல் நாட்டு அரசினருக்குப் பெரும் ஐயப்பாட்டை விளைத்தது. அப் பெரும் கூட்டத்தினர் அவ்வளவு தொலை கடந்து ஒரு வானக்கணக் கெடுக்க வந்திருப்பார்கள் என்று அவர் நம்பவில்லை. அந்தோ ! அவ் வரசியற்றலைவருக்கு வானநூல் என்பதே தெரியாது. ஆதலால் குக்கும் அவர் கூட்டத்தாரும் அவருடைய ஊரைவிட்டுப் புறப்பட்ட பிறகுதான், அவர்களைப் பற்றிய கவலை போர்த்துக்கல் நாட்டு அரசினருக்கு விட்டது ! குக் குழுவினர் பெரு மடையர்களாகவாவது போக்கிரிகளாகவாவது இருக்கவேண்டுமென்று அவ்வரசினர் நினைத்தார்கள் !

## 12. சோலாண்டர் உயிர்க்கேடு நீங்கியது

தென் அமெரிக்காவின் தென்கோடியில் உள்ள [1]டையோரா - டெல் - பியூகோ என்ற தீவில் டாக்டர் சோலாண்டர் என்பவர் தமக்குற்ற ஓர் உயிர்க்கேட்டினின்று அரிதின் நீங்கினார். டாக்டர் பேங்க்ஸ் என்பவருடன் பதின்மரைக் கூட்டிக்கொண்டு சோலாண்டர் செடி வகைகளைச் சோதிக்க நாட்டுக்குள் சென்றார். நாடு மலைகள் நிறைந்திருந்தது. இரவு நேரத்தில் குளிர் மிகுதியால் அவர்களுக்கு உறக்கம் மிகுதியாயிற்று. டாக்டர் பேங்க்ஸ் ஆங்குள்ள அல்லல்களையும் இன்னல்களையும் அளந்தறிந்து, பனியில் உறங்குபவர் உயிருடன் எழமாட்டார் என்று சொல்லி முன்னேக்கிச் சென்று கப்பலை அடையவேண்டுமென்று வற்புறுத்தினார். சிலரை முன் அனுப்பி அருகில் எங்காவது நெருப்புமூட்டச் சொன்னார். அவர்களுக்குப் பின்னால் சென்றவர்களுக்கு எல்லாம்

1. Tierra-del - Fuego.

அலுப்பு மேலிட்டது. டாக்டர் சோலாண்டரே தாம் எங்காவது சில நிமிடங்களாவது உறங்கவேண்டு மென்றார். ஆனால் மற்றையோர் அவரைத் தள்ளாடிக் கொண்டாவது தங்களுடன் வந்துவிடத் தூண்டினர். இருப்பினும் டாக்டர் சோலாண்டர் தரையில் அயர்ந்து உறங்கி விட்டார். அதற்குள் நெருப்பு மூட்டச் சென்றவர் களுள் ஒருவர் வந்து மிக அருகில் நெருப்பு மூட்டி யிருப்பதாகச் சொன்னார். டாக்டரை எழுப்பி நெருப்பு அருகிற் கொண்டுபோய் அவருக்கு உயிர்ப்பு உண்டாக்கி னார்கள். அவ்வாறு டாக்டர் தமக்கு ஏற்படவிருந்த உயிர்க்கேட்டினின்று மீண்டார்.

## 13. டஹிட்டித் தீவு

பின் ஐந்து வாரங்கள் பயணஞ்செய்து எண்டவர் கப்பல் [1]ஹாரண் முனையைச் சுற்றி மெஜெலென் நீர்ச் சேர்த்தியின் மேற்கில் சென்றது. பசிபிக் பெருங்கடலில் உள்ள தீவுகளை நெருங்கியதும் கப்பற்காரர்களுடைய மகிழ்ச்சி பொங்கியது. 1769-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 10-ஆம் நாள் [2]டஹிட்டித் தீவில் உள்ள [3]மாடாவைக் குடா வில் தங்கினார்கள். அத் தீவில்தான் [4]வெள்ளியின் போக்கு நன்கு தெரியும். அங்குத்தான் அப்பயணத்தில் மூன்று திங்கள் காலம் மிகக் களிப்புடன் நாவிகர் குக்கும் அவ ருடன் சென்றவரும் தங்கிக் கழித்தனர்.

அத் தீவு போய்ச் சேருமுன் நாவிகர் குக்குக்கும் அவருடைய நண்பர்களுக்கும் இருபெருங் கவலைகள் ஏற்பட்டன. அத்தீவில் வெள்ளி போகும் நாளில் வானத்தை முகில்கள் மூடிக்கொண்டால் என்ன செய்வ

1. Horn. 2. Tahiti. 3. Matavai.
4. Transit of Venus.

தென்றும், அத் தீவில் வாழ்பவர்கள் தங்களிடட
பூண்டு இன்னல் விளைத்தால் யாது செய்வதெ
கவலைப்பட்டனர்.

## 14. தீவின் அழகு

டஹிட்டி பச்சைப்பசுந் தீவுகளின் நடுவே கர
ஒளியில் அழகு மிகுந்து விளங்கியது. அது ெ
மிகுந்ததா யிருந்தது. ஆங்காங்குப் பவளபே
செக்கச்செவேலென ஒளிர்ந்தன.

## 15. துணைவர்க்கு எச்சரிக்கை

நாவிகர் குக் அத் தீவுவாசிகளிடம் தாங்கள் எ
ரும் மிகவும் நயமாகப் பழகவேண்டுமென்று செ
தம் நண்பர்கள் தங்கள் கைத்துப்பாக்கிகளை அ
வாசிகள் மேல் பயன்படுத்தலாகாது என எச்சரி

## 16. தீவுமக்களின் நட்புத்தன்மை

நாவிகருடைய கப்பல் டஹிட்டித்தீவை நெ
தும், அத் தீவுவாசிகள் தங்கள் நட்புணர்ச்சிக்கு
யாளமாக மரங்களின் பசுங்கிளைகளைக் கையிலே
படகுகளிற் சென்று அவர்களை வரவேற்றனர்.
கண்ட நாவிகர்களுக்குத் தீவுவாசிகளைப்பற்றிய
தீர்ந்தது. தாங்களும் நட்புக் கொண்டாடு
அறிவிக்க நாவிகர்களும் தங்கள் கப்பற் கயிறுகளி
தழைகளைச் செருகினார்கள். நாவிகர் குக் து
சிலருடன் கரை சேர்ந்தார். டஹிட்டித் தீவுத்த
அவர்கள் தங்கள் வான ஆராய்ச்சிக் கருவிகளைத்
அமைத்துக்கொள்ள உரிமை யளித்தான்.

அத் தீவு எங்கணும் நிறைந்திருந்த பசுமரங்களும், நறுமணமும், வண்ணத்திப் பூச்சிகளும், கடல்நோயுற்ற நாவிகர்க்குப் பெருங் களிப்பளித்தன. தாங்கள் வான் நிகழ்ச்சி அறியவேண்டிய நாள் வருமளவும் நாவிகர் குக் டஹிட்டி மக்களுடைய வாழ்க்கை முறைகளை அறிவதிற் கழித்தார். டாக்டர் சோலாண்டர் அறிவியல் துறைபற்றி ஆராயப் போய்விடுவார்.

## 17. அவர்கள் வாழ்க்கை முறை

அக்காலத்திய டஹிட்டியர்கள் உயரமாகவும் அழகாகவும் இருந்தார்கள். அவர்கள் பழுப்பு நிறமானவர்கள். அவர்களுடைய பற்கள் வரிசையாகவும் வெள்ளையாகவும் இருந்தன. அவர்கள் அன்றாடம் பலதடவை குளித்துத் துப்புரவாக இருந்தார்கள். உடல் முழுவதும் பச்சை குத்திக்கொள்ளுவார்கள். ஒருவகையான முரட்டுத்துணி நெய்யவும், கோரைகளாற் கூடைகள் முடையவும் அவர்களுக்குத் தெரியும். அவர்கள் முரட்டுக்குணம் உடையவர்கள். விளையாட்டுக்களில் அவர்களுடைய உணர்ச்சி போற்றத்தகுந்தது. வெற்றி பெற்றவர்கள், தங்கள் மேன்மையைப் பற்றிக் கொக்கரிப்பதும் தோற்றவர் மனமழிவதும் இல்லை.

ஒருநாள் அத் தீவுஅரசி எண்டவர் கப்பலுக்கு வந்தாள். அவள் சில பரிசில்களை நாவிகர் குக்குக்குக் கொடுத்தாள். நாவிகர் குக் அவட்கு ஒரு பொம்மையைப் பரிசாகக் கொடுத்தார். அவள் அப் பொம்மையை எடுத்துக்கொண்டு கரை சேர்ந்ததும், ஒரு தலைவன் அவள் கொண்டுவந்த பொம்மையைப் பார்த்துப் பொறாமை கொண்டு கலகமிட்டான். அதுகண்ட நாவிகர் குக் இன்னொரு பொம்மையைத் தேடித் தலைவனுக்குக்

கொடுத்தபின்தான் அந்தத் தலைவனுக்கும் அரசிக்கும் அமைதி ஏற்பட்டது.

## 18. களவாடுந் தீக்குணம்

டஹிட்டியர்களிடம் குடிகொண்டிருந்த தீக்குணம் களவாடுதலாம். அடிக்கடி அவர்களுக்கும் வெள்ளையர் களுக்கு மிடையே திருட்டுபற்றிச் சச்சரவுகள் ஏற்படும். அவ்வேளைகளில் குக் தலையிட்டுக் கலகத்தைத் தடுப்பார். அவர் அடிக்கடி தம் துணைவரை நோக்கித் "தீவுக்காரர் கள் மூர்க்கராயிருப்பதால் நாம் விட்டுக்கொடுக்க வேண்டும். ஏனெனில் நாம் அவர்களைவிட வலிமை பெற்றவர்கள். சிலரைக் கொன்று வீழ்த்துவதால் நாம் அடையும் நன்மை யாது? நம் துப்பாக்கிகளுக்கு அவர் களுடைய கைத் தடிகள் ஓர் இணையல்ல," என்று அடிக் கடி சொல்லுவார்.

நாவிகர் குக் அத் தீவுவாசிகளைத் தம் கூட்டத்தினர் கொல்லாமற் காத்தது மாத்திரமன்றி, அவர்கள் நல் வாழ்க்கை நடத்தவும் உதவிசெய்தார். டஹிட்டித் தீவு செழிப்பு மிகுந்ததாயிருந்தும் உணவுப் பொருள்கள் மிகுதியாக அங்கே பயிராகவில்லை. ஆதலால் டஹிட்டி யர்க்குப் பயன்படுவதாக, எலுமிச்சை, நாரத்தை, கிச்சிலி முதலிய பழமரங்கள் உண்டாக்கத் தாம் தென் அமெரிக்காவிலிருந்து கொண்டுவந்த விதைகளை அத் தீவில் நட்டார். அதனுல் குக் அவர்களுடைய பெரு நன்றிக் குரியவரானுர்.

வெள்ளியின் பயணம் நிகழவிருந்த முன்னுள், ஜூன் 2-ஆம் நாள், இரவு வந்தது. நாவிகர்களும் அறி வியலாரும் மனத்துடிப்பால் உறங்க இயலவே இல்லை.

"நாளை மேகங்களால் வானங் கருத்துவிட்டால் என்ன செய்வது?" என்று அவர்கள் கவலையுற்றனர்.

## 19. கணக்கீடுகள்

மறுநாள் காலை நன்கு புலர்ந்தது. வான் வெளி முழுதும் ஒளியுடன் விளங்கியது. ஒன்பது மணி 25 நிமிடம் 12 விநாடிக்குக் கதிரவனின் ஓரத்தில் ஒரு சிறு துளிபோல வெள்ளிக்கோள் காணப்பட்டது. 18 நிமிடம் 12 விநாடிக்குப்பின் அக் கோள் முழுதும் கதிரவனுடைய விளிம்புக்குள் வந்துற்றது. கதிரவனை முற்றும் தாண்டிப்போக அக் கோளுக்கு ஆறு மணி நேரத்துக்கு மேலாயிற்று. இக் கணக்குகளைக் குறித்துக் கொண்டனர்.

## 20. பயணத்தின் வெற்றி

குக் குழுவினர் தொடங்கிய பயணம் பயன் பெற்றது. அவர்கள் பெற்ற வெற்றியை நோக்க அவர்களுக்குற்ற ஆயிரக்கணக்கான இன்னல் இடையூறுகள் பொருட்படுத்தக் கூடியவை யல்ல. அதன் பின்னர்த் தென்கடலில் நாடுதேட அவர்களுக்குக் காலம் கிடைத்தது. அவர்கள் டஹிட்டித் தீவைவிட்டுப் புறப்பட்ட போது அத் தீவுவாசிகள் அவர்களை விட்டுப் பிரிய மிகவும் வருந்தினர்.

## 21. நியூஸிலாந்து

டஹிட்டித் தீவிலிருந்து புறப்பட்ட குக் குழுவினர் அக்டோபர்த் திங்கள் 7-ஆம் நாளன்று [1]நியூஸிலாந்து வடகிழக்குக் கரையைக் கண்டனர். அங்குள்ள மக்கள்

1. New Zealand.

முதன் முதல் நற்றன்மையுடன் குக் குழுவினரிடம் பழக வில்லை. அதுவரையில் வெறும் வெளியில் துப்பாக்கி வெடித்தாலே நாட்டு மக்கள் அஞ்சி யிருந்து விடுவது வழக்கமா யிருந்தது. நியூஸிலாந்தில் நாட்டுமக்களுள் ஒருவனைச் சுட்ட பிறகுதான் அவர்கள் வழிக்கு வந்தார்கள். ஜேம்ஸ் குக் தம் துணைவர் உள்நாட்டு மக்களைக் கொல்வதை இயன்றவரையில் தடுப்பதுதான் வழக்கம். ஜேம்ஸ் குக் செய்த பயணம் அறிவியல் தொடர்பானது. அதில் தம் குழுவினர் உள்நாட்டு மக்களுக்கு எத்தகைய இடையூறும் விளைக்காது பார்த்துவந்தார். ஆனால் நியூஸிலாந்து நாட்டுமக்கள் குக் குழுவினரிடம் மிகுந்த பகைமை பூண்டு போர் புரியவே துணிந்து நின்றமையால் நாட்டு மக்களிற் சிலர் குக் குழுவினர் கையால் மடிய நேர்ந்தது.

## 22. மக்கள் வாழ்க்கை

ஆறு திங்கள் காலம் நியூஸிலாந்தின் வட, தென் தீவுகளை ஆராய்வதில் குக் குழுவினர் கழித்தனர். வடதீவின் ஒரு பகுதியினர் [1]மக்கள் உண்ணும் இனத்தவர் எனக் கண்டு மிகவும் அவர்கள் அஞ்சினர். போரில் தோற்று இறந்த தங்கள் பகைவர்களின் உடல்களை அம் மக்கள் உணவாக உண்டார்கள். மக்கள் மண்டையோடுகளைக் கொடுத்துப் பண்டங்கள் மாற்றினார்கள். அது மட்டுமன்று. அவ் வோடுகளைப் படகுகளில் தேங்கும் நீரை முகந்து கொட்டும் கலமாகவும் பயன்படுத்தினர். இக் காட்சிகள் குக் குழுவினரைப் பெரிதும் அச்சுறுத்தின. அம் மக்கள் அறிவு வளத்தில் குறைந்தவராகக் காணப்படவில்லை. உறுதியான கற்களைக் கொண்டும் மானிட

1. Cannibals.

எலும்புகளைக்கொண்டும் அவர்கள் கூர்மையான கோடரிகள், உளிகள், ஈட்டிகள் முதலியன செய்து கொண்டார்கள். அவர்களுடைய மிகப்பெரும் ஈட்டிகள் 16 அடி நீளம் இருந்தன. அவர்கள் தங்கள் காதுகளைக் குத்திக்கொள்வதுண்டு. காது குத்திய துளையில், இறகுகள், எலும்பு, மரத்துண்டுகளை அடைத்துக்கொள்ளுவார்கள். அவர்களுடைய பேச்சு, உருவம், பழக்க வழக்கங்கள் முதலியன பசிபிக் தென்தீவு மக்களுடையனவற்றைப் பெரும்பாலும் ஒத்திருந்தன. நியூஸிலாந்து மக்களும் தென் தீவுகளிலிருந்து இங்கு வந்து தங்கியவர்களாயிருக்கவேண்டும்.

## 23. ஆஸ்திரேலியா

கி. பி. 1770-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் கடைசி நாளன்று நியூஸிலாந்தை விட்டுக் குக் குழுவினர் புறப்பட்டனர். அவர்கள் அப்பொது [1]புது ஹாலந்து என வழங்கிய [2]ஆஸ்திரேலியாவை நோக்கி மேற்கு முகமாகச் சென்றனர். ஆஸ்திரேலியாவின் கீழ்க்கரை வழியே தெற்கிலிருந்து வடக்கு நோக்கி அவர்கள் பயணஞ் செய்தனர். அந்நாட்டுப் பறவைகள், விலங்குகள் மக்கள் முதலியன பற்றி ஆராய்ந்துகொண்டே சென்றார்கள். [3]கங்காரு என்ற விந்தைமிகுந்த விலங்கை அறிந்த முதல் வெள்ளையர்கள் குக் குழுவினர்தாம். ஆஸ்திரேலிய மக்கள் தங்கள் உடம்புகளில் பல நிறங்களைப் பூசிக் கொண்டு கடற்கரையில் அங்கங்கே மீன் பிடித்துக் கொண்டிருந்ததை அவர்கள் கண்டார்கள். மரஞ் செடி கொடிகளையும் ஆராய்ந்து பார்த்துக்கொண்டே அவர்கள் போனார்கள்.

---

1. New Holland. 2. Australia. 3. Kangaroo.

புத்தம் புது நாடுகளைக் கண்டறிந்தது மட்டுமன்றிப் புதுப்புது அறிவியல், விலங்கியல் உண்மைகளையும் அப் பயணத்தில் அவர்கள் கண்டறிந்தார்கள்.

நியூஸிலாந்து மக்களைவிட ஆஸ்திரேலியர் நட்புத் தன்மையில் மிகுந்திருந்தனர். அவர்கள் தங்கள் உடல் உறுப்புகளுக்கு வெள்ளை சிவப்பு நிறந் தீட்டிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் கிளிஞ்சல்களைக் கோத்துத் தங்கள் மார்பைச் சுற்றிக் கட்டிக்கொண்டிருந்தார்கள். அதுதான் அவர்கள் உடை. ஒரு ஆஸ்திரேலியனுக்கு ஒரு சட்டைத் துணி கொடுத்தார்கள் குக் குழுவினர். அதை அவன் சிறிது நேரம் தன் கையில் சுற்றிக்கொண்டு பார்த்துவிட்டு முடிவாகத் தன் தலையில் கட்டிக்கொண்டான்.

அதுவரையில் குக் குழுவினருக்கு அவர்கள் பயணத்தில் பெரிய இடையூறு எதுவும் நேரவில்லை.

## 24. எண்டவர் கப்பலுக்கு ஏற்பட்ட பேரிடர்

யார்க் முனைக்குத் தெற்கே 700 கல் தொலையில் எண்டவர் வடக்கு நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. திடீரென்று கடல் ஆழங் குறையலாயிற்று. உடனே கப்பலை நடுக்கடல் நோக்கித் திருப்பினார்கள். அப்போது கடலில் ஆழம் இடத்துக்கு இடம் மாறுபட்டு ஓரிடத்தில் எண்டவர் மோதியது. இரவில் வானம் தெளிவாயிருந்தது. உடனே கப்பலைச் சோதித்தபோது கப்பலின் கீழ்ப்பகுதி பெரிதும் பழுதுபட்டிருந்தது தெரியவந்தது. ஒரு பெரிய பாறையின் நடுப் பள்ளத்தில் கப்பல் நின்றது. அப் பாறையின் கூரிய விளிம்பு மோதித்தான் கப்பலுக்கு இடையூறு உண்டாயிற்று. கப்பலின் அடிப் பலகைகள்

பல பெயர்ந்து போயிருந்தன. கப்பலில் பளுவாயிருந்த பொருள்களை எல்லாம் அப்புறப்படுத்தினார்கள். வெகு நேரம் கப்பற்காரர்களுக்குச் செய்வ தின்னதென்று புரியாமலிருந்தது. பின்னர், பேரலைகளால் கப்பல் நகர்ந்தது. ஆழமான இடத்துக்குப் போயிற்று. ஆயினும் கப்பலில் பெரும் ஓட்டை ஏற்பட்டிருந்தமையால் குக் குழுவினருடைய நிலைமை மிகவும் கேடானதாயிருந்தது. வடிகுழாய்களைக் கொண்டு கப்பலுள் தேங்கும் நீரை இறைத்தாலும் கடல்நீர் மிகுந்த வேகத்துடன் கப்பலின் உட்சென்றமையால் நீர் குறைந்தபாடில்லை. ஒரு பாய்த் துணியில் ஆட்டு மயிரையும் பலகையையும் நிரப்பிச் சுற்றிக், கப்பலில் உண்டாயிருந்த ஓட்டைக்குள் செலுத்தினார்கள். அதனால் நீர்ப்பெருக்கு நின்று கப்பலுக்குற்ற பெருங்கேடு நீங்கியது. பிறகு அடித்த காற்றுவேகத்தில் கப்பல் கரைநோக்கிச் சென்றது. அங்கே கப்பலைச் சோதித்ததில் ஒரு பாறைத்துண்டு நொறுங்கிய பலகைகளினிடையே பதிந்து இருந்தது. அதுதான் பலகைகள் விலகாவண்ணம் செய்தது. அப் பாறைத்துண்டு பலகைகளிடையே புகுந்திராவிடில் பலகைகள் விலகிக் கப்பல் நீருள் மூழ்கி இருந்திருக்கும். என்னே இறைவனின் செயல்! கப்பலை மோதி உடைத்த பாறையின் ஒரு துண்டே அக் கப்பலைக் காக்கும் முனையாகவும் உதவியது. எல்லாம் அவன் திருவிளையாடல் அல்லவோ!

## 25. பயண இடர்கள்

அக்கடலில் இருந்த [1]பவளப் பெரும் பாறைத் தடைகளும், [2]மணற்றரைகளும் அவர்கள் பயணத்துக்குப் பெரும் இடையூறுகளாயிருந்தன. ஆயினும் அவர்கள்

1. The great Coral Barrier Reef. 2. Sandunes.

பெரிய இடையூறு ஏதும் இன்றி, யார்க் முனையை அ
தார்கள். அங்கிருந்து மேற்கு நோக்கித் திரும்பிக்
கிந்தியத் தீவுகளுக்குச் சென்றார்கள். [1]ஜாவாவை நோ
போய் அதன் மேற்குக் கோடியில் உள்ள [2]படேவிய
அடைந்தனர். அங்கே சில காலம் தங்கித் தங்கள்
லைப் பிரித்துக் கட்டிக்கொண்டார்கள். அக்கால
படேவியா தாழ்ந்த நிலமாயிருந்தமையால் கொசு
பெருகி இருந்தன. அதனால் அங்கே [3]குளிர்கா
அதிகமாகப் பரவியிருந்தது. படேவியாவை வி
புறப்பட்டபொழுது பலர் குளிர்காய்ச்சல் அடைந்
தார்கள்.

## 26. முனை நகர்

அவர்கள் திரும்பும் வழியில் [4]நன்னம்பிக்கை
யைக் கிட்டியதும் அந்த இடத்தின் நற்க
நோயடைந்தவர்க்கு நலத்தை யளித்தது. அக்கால
[5]முனை நகரில் மக்கள் தொகை மிகவும் குறைவா
இருந்ததாம்.

குக் குழுவினர் முனைநகரைவிட்டு ஏப்பிரல் 1
நாள் புறப்பட்டு 1771-ஆம் ஆண்டு ஜூலை 12-ஆம்
இங்கிலாந்து வந்தடைந்தார்கள்.

## 27. பயணத்தின் பயன்கள்

அப் பயணத்தின் நோக்கமாகிய வெள்ளிக்கே
வானப் போக்கு ஆராய்ச்சி நன்கு முடிவுற்றது
நாவிகர் நியூஸிலாந்து இரு பெருந் தீவுகளைக் கொ
என்று விளக்கினார். டஹிட்டித் தீவினருகே

1. Java. 2. Batavia. 3. Malaria.
4. Cape of Good Hope. 5. Cape Town.

கடற் கண்டம் எதுவும் இல்லை என்பதைக் கண்டறிந்தார். ஆஸ்திரேலியாவின் கீழ்க்கரை முழுதும் பயணஞ் செய்து ஆராய்ந்தறிந்தார். இவற்றை யெல்லாம் அந் நாளில் மிகவும் திருத்தமான படங்களில் குறித்தார். நாடுகாண்பவர் ஒருவருக்கு இவற்றைவிட வெற்றிகள் வேறென்ன வேண்டும்?

ஜேம்ஸ் குக் திரும்பி வந்தது முதல் இங்கிலாந்து ராயல் கழகத்தார் மறுபடியும் நீள நினைந்தனர் "தென் கடல்களில் பல பெருந்தீவுகள் உள்ளன; ஆதலால் ஒரு பெரு நிலப் பரப்பும் ஆங்கு இருந்தே தீரவேண்டும். நாம் முன்பு நினைத்ததைவிட டஹிட்டியிலிருந்து இன்னும் மிகுந்த தொலைவில் அக் கண்டம் இருக்கலாம்," என்று எண்ணமிட்டார்கள்.

## 28. குக்கின் இரண்டாம் பயணம்

இந்த ஐயப்பாட்டைத் தீர்க்க நாவிகர் குக்கைவிடச் சிறந்தவர் யாருமில்லை. நியூஸிலாந்தை அவர் படமாக வரைந்தது எல்லையற்ற சிறப்புடையதாயிருந்ததென்று தரைநூலார் போற்றினர். இங்கிலாந்துக்கு மிக அண்மையிலிருந்த பிரான்சு நாட்டுப் படங்கள்கூட, நெடுந் தொலைவிலிருந்த நியூஸிலாந்து படங்களைப்போலத் திருத்தமாக அமையப் பெறவில்லையென்று அவர்கள் கருதினார்கள்.

பயணத் தலைவரான ஜேம்ஸ் குக் புறப்பட எப்பொழுதும் ஆயத்தமே! பயணத்தில் கப்பற்காரர்களுக்கு ஏற்படும் நோயைத் தடுப்பதெவ்வாறு என்று எண்ணமிட்டார். முன்னாட் பயணத் தலைவர்கள்—வாஸ்கோடகாமா, கொலம்பஸ்—முதலானோர் தங்கள் குழுவினர்

நோயால் மடிவதைக் கண்டிருந்தனர். ஆனால் குக்குக் தம் துணைவர்களின் நலமே மிகவும் முதன்மைய தாயிற்று.

## 29. நோய்த்தடை ஏற்பாடுகள்

கடலில் உண்டாகும் நோய் அவர்கள் உட்கொள்ளு உணவினால் ஏற்படுவதென்று உணர்ந்தார். உப்பிட இறைச்சி முதலியன இயற்கைக்கு மாறானவை; ஏர மான பச்சைக் காய்களை உண்டால் அந்நோய் வரா எனக்கண்டு அவற்றை ஏராளமாகத் தேடிக்கொண்ட அதற்குமுன் எந்தத் தலைவரும் தங்கள் பயண உண வகைகளைப்பற்றி அவ்வளவு அக்கரை எடுத்து கொள்ளவில்லை.

நாவிகர் குக் செய்த முன்னேற்பாடுகள் பெரிது பயனளித்தன. அவருடைய கடைசிப் பயணம் மூன் ஆண்டுகள் பிடித்தது. உலகைச் சுற்றி அறுப ஆயிரம் மைல்கள் சுற்றினார். அப்பெரும் பயணத் அவருடன் சென்ற நூற்றுப் பதினெண்மருள் ஒரு தாம் நோயால் இறந்தார்.

அப் பயணத்தில் தென் கடற்கண்டம் பற்ற முடிவைக் கட்டாயம் கண்டறிய நிச்சயித்தார். அ வரையில் ஐரோப்பியர் எவரும் போய் அறிய கடல்கள் எல்லாம் தாண்டிச் செல்ல நினைத்தார். தெ துருவக் கோட்டை மிக நெருங்கிச் செல்ல நினைத்த உண்மையான தரையறிவாளியாதலால், தாம்கண் தீவுகளில் இருந்த மக்களின் வாழ்க்கை விவரங்கள கண்டறியவும், அவர்களுடன் பழகி அவர்களுடை நட்பைப் பெறவும் விரும்பினார்.

## 30. நெடுந்தொலை செல்லல்

மற்றெந்தக் கப்பற்காரரும் சென்றதைவிட மிகுதியாகத் தெற்கு நோக்கிச் செல்லத் தொடங்கினர். குளிர் தாங்கொணாதபடி மிகுந்தது; துருவப் புயல்கள் கப்பலை ஆட்டிவைத்தன. குன்றுகளைப் போன்ற பனிக்கட்டிகள் மூடுபனியிடையே தோன்றின. அவர்களுடைய கப்பல் தத்தளித்தது. குக் மிகுந்த எச்சரிக்கையுடன் சென்றார்

## 31. பனி வயல்கள் பனி மிதப்புகள்

கண்ணுக் கெட்டியவரை பனி உறைந்த ஓர் இடத்தைக் கப்பல் நெருங்கியது. அதைச் சுற்றிச் செல்ல குக் செய்த முயற்சி பலிக்கவில்லை. வானளாவும் தொலைவரை பனிக்கட்டிகள் நிறைந்திருந்தன. எங்குப் பார்க்கினும் பனிவயல்கள் போன்றிருந்தது. அதைத் தாண்டித் தெற்குக் கண்டம் ஏதேனும் இருக்குமா! தொடர்ந்து போவது அறிவற்ற செயலாகும். குளிர் தாங்கொணாததாயிருந்தது. மாலுமிகளின் கைகளில் குளிரால் இரத்தம் பீரிட்டு அடித்தது. அந்நிலையில் குக் நாவிகர் நியூஸிலாந்து கரையை நோக்கித் தம் கப்பலை வடக்கே செலுத்தினர். தம்முடைய பழைய நண்பர்களையும் பழமையான இடங்களையும் மறுபடியும் போய்ப் பார்க்க அவர் விரும்பினர். டஹிட்டியில் முன்பு நண்பனான அரசன் அவர்களைத் திரும்பக் காண மிகவும் மகிழ்ந்தான். குக்கைக் கண்டவுடன் ஓடிவந்து கட்டிப் பிடித்து மகிழ்ச்சிக் கண்ணீர் விட்டான்.

## 32. டஹிட்டி திரும்புதல்

சில பசுக்கள், ஒரு காளை, ஒரு ஆண் குதிரை, ஒரு பெண் குதிரை, இரு செம்மறியாடுகள், பத்து வெள்ளாடு

கள் ஆகியவற்றைக் கரையில் இறக்கி அவற்றை டஹிட்டி அரசனுக்குப் பரிசாகக் கொடுத்து அவற்றின் பயனையும் சொன்னார் குக். பின்னர் உருளைக்கிழங்கு, மஞ்சள் முள்ளங்கி முதலான கிழங்கு வகைகளைத் தரையில் நட்டு அவற்றைப் பயிரிட்டுப் பெருக்கும் வழிகளையும் அந் நாட்டு மக்களுக்குக் கற்பித்தார்.

## 33. தாளாண்மை

ஜேம்ஸ் குக் அன்றி வேறு எந்த நாவிகராயினும், அத்துடன் நாடு திரும்பித் தெற்கே நிலம் எதுவும் இல்லை என்று சொல்லியிருப்பார். ஆனால் நாவிகர் குக் அத்தகையவரல்லர். கடல் பரப்பில் கண்டறியாத இடங்கள் மிகுதியாயிருந்தமையால் அவற்றை எல்லாம் போய்ப் பார்த்து விடுவதென்று திண்ணமாக நிச்சயித்தார். அவருடைய துணைவரும், இடர்மிகும் தென் கடற் பயணத்தைப் பற்றியோ, பனிப் புயல்கள், பனி மிதப்புகள் பற்றியோ சிறிதேனும் அஞ்சாமல் தங்கள் தலைவரிடம் முழு நம்பிக்கையுடன் சென்றனர். இறுதியில் தென் கடற் கண்டம் என்பது இல்லையென்று நாவிகர் குக் ஐயமறத் தெளிவித்தார்.

## 34. மூன்றும் பயணம்

தம்முடைய மூன்றும் பயணம் ஒன்றில் பசிபிக் பெருங்கடலில் உள்ள [1]ஹவாய்த் தீவுகளைக் குக் கண்டார். பின்னர் [2]பேரிங் நீர்ச் சேர்த்தி வழியே சென்று, அட்லாண்டிக் கடலிலிருந்து செல்லும் வடமேற்கு வழி, பசிபிக் கடலுக்குப் போகாது என்றும், அஃது அவ்வாறு

1. Hawaiian Islands. 2. Bering Strait.

செல்லும் என்று முன்னோர் எண்ணியது தவறெனவும் விளக்கினார்.

## 35. இங்கிலாந்தும் உலகும் ஜேம்ஸ் குக்குக்குக் கடமைப் பட்டிருத்தல்

இங்கிலாந்து தென்கடல் நாடுகளைப் பெற்றது ஜேம்ஸ் குக்கினுடைய பெருமுயற்சியால்தான். அதற்காக இங்கிலாந்து, நாவிகர் ஜேம்ஸ் குக்குக்குப் பெரிதும் கடமைப்பட்டதாகும். இங்கிலாந்தன்றி உலகமே நாவிகர் குக்குக்குப் பலவழிகளில் கடமைப்பட்டதாகும். "தென்கடலில் பெரு நிலப்பரப்பு என்பதொன்றில்லை" என உலகுக்கு ஐயமற அவர் விளக்கினார். தாம் கண்டறிந்த புது விடங்களில் நாகரிகம், நல்வாழ்க்கை, இவற்றிற்கான வழிகளைக் காட்டினார். ஆதலால் அவரை "நாடு கண்டவர்களுள் அருமையாகப் பாராட்டத்தக்கவர்," எனக் கூறுதல் மிகவும் பொருத்தமுடைத்தாம்.

---

# சா. [1]ரிச்சர்ட் பிரான்சிஸ் பர்ட்டன்

## 1. அரேபியா

புதிய நாடுகளைக் கண்டு பிடிப்பதில் ரிச்சர்ட் பிரான்ஸிஸ் பர்ட்டன் மிகவும் ஊக்கம் கொண்டிருந்தார். அவர் நல்ல தைரியசாலி; சிறந்த எழுத்தாளருமாவார். அவர் காலத்தில் ஏதாவது ஒருநாள் இஸ்லாமியர் பலர் கூடி [2]மெக்கா [3]மெதீனா போன்ற தலங்களுக்குப் புறப்படுவார்கள். அப்போதுதான் அரேபியாவென்னும் நாடு ஒன்று உளது என்பது ஆங்கிலேயருடைய நினைவிற்கு வரும். அதன் பிறகு பல திங்களுக்கு அந்நாட்டைப் பற்றிய நினைவே அவர்களுக்கு ஏற்படக் காரணம் இருப்பதில்லை. எனினும் அந்நாட்டு மக்களுடைய பழக்க வழக்கங்களையும், பருவ நிலைகளையும், விலங்குகளையும், அந்நாட்டின் பரப்பையும், அமைப்பையும் அறியவேண்டுமென்னும் பேராவல் பன்னாட்டு மக்களின் உள்ளத்தில் ஏற்பட்டது. அந்நாட்டிற் பெரும் பகுதி பாலைநிலம். அப் பாலை நிலத்திலும் அவ்வப்போது சுழற்காற்று ஏற்பட்டுப் பயணஞ் செய்பவர்களின்மேல் மணலை வீசி வீசி அடிப்பதும், அந் நிலத்தில் கதிரவனின் தாங்கொணா வெப்பமும் சேர்ந்து அரேபியாவைக் கண்டறிய விரும்பியவர்களுக்கு மிகவும் உளத்தளர்வைக் கொடுத்தன. அன்றியும் வழியில் கொள்ளையடிப்பவர்கள் தொல்லையும், உணவு நீரின் பஞ்சமும் சேர்ந்ததினால் [4]"அரேபியா" என்றாலே பலருக்கு நடுக்கமாயிற்று. இவ்வாறான இன்னல்களை மீறி, அப்பாற் சென்றாலோ, அந்நாட்டு மக்கள் முகமதிய சமயத்தவர்களைத் தவிர பிற

---

1. Richard Francis Burton. 2. Mecca.
3. Medina. 4. Arabia.

நெறியினரை மிகவும் கொடுமைப்படுத்துவார்கள் என்னும் [1]கூற்று ஒன்றும் உலாவியது.

## 2. பர்ட்டன் துணிவு

பர்ட்டன் சிறந்த எழுத்தாளர் என்று முன்பு கூறினோம். அவருக்கு நாவன்மையும் மிகுந்திருந்தது. கீழ் நாடுகளில் பன்னாட்கள் பயணம் செய்தமையால் அவர் பன்னாட்டு மக்களோடும் பழகுவதற்கு வாய்ப்புக் கிடைத்தது. ஆதலால் பர்ட்டன் பல கீழ்நாட்டு மொழிகளைச் செவ்வனே பேசுந்திறமை பெற்றிருந்தார். கீழ்நாடுகளைப் பற்றித் தமக்குள்ள அறிவும் பயிற்சியும் தமக்கு வெற்றி தரும் என்னும் துணிவோடு பர்ட்டன் ஒரு முகமதியரைப்போல உடையணிந்துகொண்டு, தமது குறிப்புப் புத்தகத்தையும், எழுதுகோலையும், இடுக்கணில் உதவுவதற்கான ஆயுதத்தையும் மறைவாக எடுத்துக் கொண்டு அரேபியாவுக்குப் புறப்பட்டார்.

## 3. பயணம்

பாலை நிலத்தில் செல்லும்போது அவருடைய நா உலர்ந்தது; ஒளி மிகுதியினால் கண் நொந்தது; சுழற் காற்று வேறு தொல்லை கொடுத்தது. கருமமே கண்ணான பர்ட்டன் மெக்கா சென்று பல உண்மைகளை அறிந்து நேரம் வாய்த்த போதெல்லாம் மறைவாக அவற்றைக் குறித்துக்கொண்டு தாய்நாடு திரும்பினார். திரும்பியதும் தாம் கண்ட உண்மைகளை ஒரு நூலாக வரைந்தார். அந் நாட்டிற் சிறந்து வழங்கிய கதைகளை ஆங்கிலத்தில் ஒரு நூலாக மொழிபெயர்த்தார். அது தான் [2]அரேபிய இரவுகள் என்னும் நூல்.

---

1. Rumour. 2. Arabian Nights.

## 4. பார்ட்டனுடைய புதிய பயணம்

அரேபியாவிலிருந்து வெற்றியுடன் திரும்பிய பார்ட்டனை ஆங்கிலேயர் மிகவும் வாழ்த்தினர்; எனினும் பார்ட்டன் நெடுநாள் இங்கிலாந்தில் களித்திருப்பதை விரும்பவில்லை. ஆபிரிக்காவின் பெரும்பாகம் இன்னும் ஆராயப்படாததாகவே இருந்தது. தாமும் ஆபிரிக்கா வின் ஒரு பாகத்தை ஆராய்ந்தால், அது தம் நாட்டா ருக்கு மிகவும் நலம்பயக்குமென்றெண்ணினர். அவரது எண்ணத்தை யறிந்த நண்பர்கள் கீழ் ஆபிரிக்காவின் நடுப்பகுதியில் [1]ஹரார் நகரைத் தலைநகராகக்கொண்டு ஒரு முகமதிய அரசன் ஆண்டுவந்ததாகவும், அவன் அடிமை வாணிபத்திற் சிறந்தவனென்றும், அயலார் எவரையும் தன்னுட்டிற்கு வரவிடுவதில்லை என்றும், ஆங்கில அரசினர் அடிமை வாணிகருக்கு ஊறு விளைப்ப தால் ஆங்கில நாட்டாரை அவ்வரசன் அதிகமாக வெறுப்பானென்றும் பார்ட்டன் ஆபிரிக்கா செல்வது நலமன்றென்றும் கூறினர். இதைக்கேட்ட பார்ட்டன் அவ்வரசனைக் காணப் பேரவாக் கொண்டார். அவ்வரச னைப்பற்றித் தம் நண்பர்கள் கூறியது உண்மையா வென ஆராய விரும்பினர். அவ்வரசனை ஆங்கில நாட்டா ருடன் நட்புக் கொள்ளச் செய்ய வேண்டுமென்று விரும்பினர்.

## 5. ஆபிரிக்கா செல்லுதல்

ஓர் அடிமை வணிகனைப்போல வேற்றுருக் கொண்டு பல பணியாட்களும் ஒட்டகங்களும் குதிரை களும் [2]பொதிக் கழுதைகளும் பின் தொடர அவர்

1. Harar. 2. Mule.

ஹுரார் நகரை நோக்கிப் புறப்பட்டார். அரேபியர் வேடத்தில் காணப்பட்ட அவரை வழி நெடுக மக்கள் அன்போடு வரவேற்றுப் பேரீச்சம்பழமும் சோறும் அளித்து உதவினார்கள். அவர்கள், பர்ட்டன் ஹுரார் செல்லும் வழியில் காடுகள் இருப்பதாகவும் அவற்றில் சிறுத்தை, புலி, சிங்கம்போன்ற கொடிய விலங்குகள் வாழ்வதாகவும் அவற்றால் பர்ட்டனும் அவரது கூட்டத்தாரும் இடர்ப்படவும் நேரலாமென்றும் அஞ்சினர். அவர்களுடைய கவலையை அறிந்த பர்ட்டனுடைய பணியாட்களுள் பலர் உடனே தங்கள் நாடு திரும்பினர். பணியாட்களுடைய வஞ்சத்தை யறிந்தும் பர்ட்டன் ஊக்கங் குன்றவில்லை; மிகுந்திருந்த துணையாட்களைச் சேர்த்துக்கொண்டு தம் பயணத்தை மீண்டும் தொடங்கினார். வழியில் ஆங்காங்கு வளர்ந்திருந்த கருவேல மரக்கூட்டங்களும், அவற்றை யடுத்துத் தோன்றிய சிறு நீரூற்றுக்களும் அவருக்கு மிகவும் நலம் விளைவித்தன. இவ்வாறே பல நாள் பேரீச்சம் பழத்தையே தம் உணவாகக் கொண்டு சென்று ஹுரார் நகரையடைந்து அந் நகரிறையைக் கண்டு இன்சொற் பேசித் தம்மை அவரின் நண்பராக ஏற்றுக்கொள்ளும்படியும், ஆங்கில நாட்டாரோடு அன்பு பாராட்டும்படியும் வேண்டினார். அவ்விறைவர் பர்ட்டன் கூறியபடி நடக்க உண்மையாகவே விரும்பவில்லை யென்றாலும், அவருடைய உள உரத்தை வியந்தார்; அவரைச் செவ்வனே மகிழ்வூட்டி அனுப்பினார்.

## 6. பர்ட்டனுடைய புதிய ஆவல்

பர்ட்டன் நெடுநாட் கழித்துத் தாய்நாடு திரும்பிய போது அவரது நண்பர்கள் மிகவும் களிப்படைந்தனர்.

சின்னுட்களுக்குப் பின்னர் வேறொரு நாட்டைக் கண்டு ஆராய வேண்டுமென்று எண்ணலானர். அந்நாளில் [1]நைல் ஆற்றினுடைய தோற்றுவாய் எவராலும் ஆராயப் படவில்லை. [2]ஹெரடோடஸ், [3]ஸ்ட்ராபோ போன்ற யவன அறிஞர் அதைக் கண்டுபிடிக்க மிகவும் முயன்றனர். அவர்களுக்குப் பின் நெடுங்காலம் வரையிற் பலர் அம் முயற்சியைக் கைக்கொண்டு ஆபிரிக்கா சென்றனர். அவ்வாறு சென்றவருள் பெரும்பாலோரைப் பற்றிய செய்தி எதுவும் கிட்டவில்லை. ஆதலால் நைல் ஆறு தோன்றுமிடத்தைத் தாம் கண்டால் தமக்கு நல்ல புகழும், தம் நாட்டினருக்கு நல்ல பயனும் கிட்டுமென் றறிந்த பர்ட்டன் ஆபிரிக்காவுக்குப் பயணமானர்.

## 7. மறுபடி ஆபிரிக்கா செல்லுதல்

பர்ட்டன் ஆபிரிக்காவுக்குச் சென்றபோது வழியி லிருந்த [4]நீக்ரோவர் அவரிடம் மிகவும் அன்போடு நடந்து கொண்டனர். அவர் பயணத்தினுல் களைப்புற்றபோது அவருக்கு உணவுப் பொருள்களைப் பதம் செய்து கொடுத்தனர்; பர்ட்டனும் தாம் முன்பு சென்ற பல ஊர்களைப் பற்றியும் அந்நாட்டு மக்களைப் பற்றியும் அவர்களுக்குக் கூறிக் களிப்பூட்டுவார். அவர்கள் பர்ட்டன் கூறுவதை மிகவும் விருப்பமாய்க் கேட் பார்கள். உற்சாக மிகுதியால் அவர்களனைவரும் சேர்ந்து களியாட் டயர்ந்தார்கள்; அவருடைய கழுதைகளின் காதுகளைப் பிடித்துக் கிள்ளி, அவை கத்துவதைக் கேட்டு "ஹோ!" வென்று கூவிக் கைதட்டிக்கொண்டு கூத்தாடுவார்கள்.

1. Nile. 2. Herodotus. 3. Strabo.
4. Negroes.

## 8. வெற்றி

இவ்வாறு பயணஞ் செய்து கொண்டு [1]தங்கனிகா அடைந்தார்; அவரது உடல்நிலை காரணமாக அதற்கு மேற் செல்ல இயலவில்லை. நெடுநாள் மழையிலும் வெயிலிலும் அலைந்ததால் அவருக்குக் காய்ச்சல் ஏற்பட்டது. அவருடைய துணைவராய [2]ஸ்பெக் என்பவர் மேலும் சென்று ஒரு பெரும் ஏரியினின்றும் நைல் தோன்றுவதைக் கண்டார். அஃது இப்போது [3]விக்டோரியா நியான்ஸா என வழங்குகிறது. ஸ்பெக் திரும்பிய பிறகு அவரும் பர்ட்டனும் தாய்நாடு மீண்டார்கள். பர்ட்டன் தாம் சென்ற ஒவ்வொரு பயணத்திலும் கண்ட உண்மைகளை ஒவ்வொரு நூலாக வெளியிட்டார். நிலவாராய்ச்சியாளருக்கு அவை பேருதவியாக இருக்கின்றன.



1. Tanganyiaka. 2. Speke. 3. Victoria Nyansa.

